# பண்டைக்காலத்தில் மன்னர்கள் இதற்காகவே போர் தொடுத்திருப்பார்கள்.



மாங்காய் மாலை — அழகுமிக்க ஒரு பாரம்பரியம் வழி வழியாக வந்த சிறந்த கலை, தங்கத்திலே ஒரு மகத்தான படைப்பு. அதிலே வைரமும் மரகதமும் மாணிக்கமும் அழகுறப் பதிப்பு. இது செல்வத்தைப் பறைசாற்றும் சிறப்பு, மாங்காய் மாலை — மேத்தா ஜுவல்லரியின் திறமை, தேர்ச்சி மற்றும் கைவினைத் திறனுக்கு இது ஒரு சிறந்த எடுத்துக்காட்டு.

வைரம், மணிக்கற்கள், தங்கம் மற்றும் வெள்ளியில் மிகச் சிறந்த படைப்புகள்... இவை எல்லாம் மேத்தா பாரம்பரியத்தின் ஓர் அங்கம். 100 ஆண்டுகளுக்கும் மேலாக இணைந்து பெற்ற அனுபவத்துடன் மேத்தா நிறுவனத்தார் தங்கள் கலையிலும் கைவினைத் திறனிலும் கருத்துடன் கவனம் செலுத்திக் கடமையே கண்ணாக இருக்கின்றனர் — இவர்களுடைய படைப்புகளில் உள்ள தரமும் தனித்தன்மையுமே இதற்குச் சான்று. பாபாலாலில் இவர்கள் பெற்ற பல்லாண்டு அனுபவம், இவர்களுடைய கடமை உணர்ச்சி, செய்யும் பணியில் சிறந்த தரம் ஆகியவற்றால், சிறந்ததையே நாடுவோர் பார்வையில் இவர்கள் உயர்ந்ததோர் இடத்தைப் பிடித்திருக்கிறார்கள்.

வாடிக்கையாளர்களுக்கு அளிக்கப்படும் தனிப்பட்ட சேவையின் மூலம், மாறிவரும் இன்றைய உலகில் மாறாத நற்பண்புகளைக் கொண்டுள்ளதாகத் திகழ்கிறது மேத்தா பாரம்பரியம்.

**என்றும் மாறாத பாரம்பரியச் சிறப்பு.**

## Mehta JEWELLERY

40, திருமலைப் பிள்ளை ரோடு, தி.நகர்,
ஜி.என்.செட்டி ரோடு பிரிவு
சென்னை-600 017. போன்: 8283130
காலை 9.30 முதல் பிற்பகல் 1.30 வரை
பிற்பகல் 2.30 முதல் மாலை 6.30 வரை



✱ வள்ளலார் உயர்நிலைப் பள்ளி



✱ ராமதாஸ் அண்ணா



✱ தலைமையாசிரியர் கிருஷ்ணமூர்த்தி

# வழி காட்டுகிறது வள்ளலார் பள்ளி!

ஒரு மாணவனையோ, மாணவியையோ ஏதாவதொரு பள்ளியில் சேர்ப்பதென்றால், முதலில் நுழைவுத் தேர்வு வைத்து, அதில் தேர்ச்சி பெற்றால்தான் அட்மிஷன் கொடுப்பார்கள். பொதுவாக எல்லாப் பள்ளிகளிலும் இதுதான் நிலை என்றாலும் நகரங்களிலுள்ள சில ஆங்கில மீடியம் பள்ளிகளில் பெற்றோரை இண்டர்வியூ செய்து குழந்தைகளைச் சேர்த்துக் கொள்வதும் உண்டு!

ஆனால், கும்பகோணத்தை ஒட்டியுள்ள கொட்டையூரில் உள்ள வள்ளலார் உயர்நிலைப் பள்ளியில் மட்டும் நுழைவுத் தேர்வில் தோல்வியடைந்தாலும் அட்மிஷன் கிடைக்கும்! ஆச்சர்யமாக இருக்கிறதா?

''ஆமாம் ஸார். நாங்கள் நுழைவுத் தேர்வு எதற்கு வைக்கிறோம் என்றால், சம்பந்தப்பட்ட மாணவன், எந்தப் பாடத்தில் பின்தங்கி இருக்கிறான் என்பதைக் கண்டுபிடிக்கத்தானே தவிர, கழித்துக் கட்டுவதற்காக அல்ல. இத்தனை ஏன்? நுழைவுத் தேர்வில் பூஜ்ஜியம் மார்க் வாங்கியவர்களுக்குக் கூட இடம் தந்திருக்கிறோம். அப்படிப்பட்டவர்களைப் பள்ளியில் சேர்த்து, அந்த ஸப்ஜெக்டில் அவர்களுக்குத் தீவிர பயிற்சி கொடுக்கிறோம். ஆக எங்களிடம் வருகிற எல்லோருக்குமே இடம் இருக்கிற வரை அட்மிஷன் கிடைக்கும்'' என்கிறார் அந்தப் பள்ளியின் தலைமையாசிரியர் எஸ். கிருஷ்ணமூர்த்தி.

ராமதாஸ் அண்ணா என்ற சாதுவின் முயற்சியில் உருவானதுதான் இந்தப் பள்ளி. முதலில் அனாதைக் குழந்தைகளுக்கான ஆசிரமம் வைத்திருந்தார் ராமதாஸ் அண்ணா. அந்தக் குழந்தைகளைப் பக்கத்தில் உள்ள பஞ்சாயத்துப் பள்ளிக்கு அனுப்ப வேண்டியிருந்தது. ஆனால் அங்கே நிலைமை சரியில்லாததால், ராமதாஸ் அண்ணாவே ஒரு பள்ளி துவங்க வேண்டியதாயிற்று. அப்படித் துவங்கப்பட்டதுதான் இன்று சுமார் 2,200 மாணவ, மாணவியரும் அறுபது ஆசிரியர்களும் கொண்ட உயர்நிலைப் பள்ளியாக வளர்ந்திருக்கிறது! இந்த வளர்ச்சிக்குக் கும்பகோணம் வைர வியாபாரி கோபால்தாஸ் குடும்பத்தினரும் ஒரு காரணம். இப்போது அனாதை ஆசிரமம் தவிர, சாதுக்களுக்கான இல்லமும் இருக்கிறது.

மிகவும் பின்தங்கிய பகுதியிலிருந்து வருபவர்களைச் சேர்த்துக் கொண்டு, அவர்களை நல்லபடி உருவாக்குவது என்பது ஒரு கலைதான். இங்குள்ள ஆசிரியர்களும், ஆசிரியைகளும் எந்தவிதத் தயக்கமும் இல்லாமல் தங்கள் முழு உழைப்பையும் இந்தப் பள்ளிக்கே பயன்படுத்துகிறார்கள். பத்தாம் வகுப்பு மாணவர்களைப் பரீட்சைக்கு இரண்டு மாதம் முன்னரே தயார் செய்கிறார்கள். காலையிலும் மாலையிலும் அவர்களுக்காகத் தனி வகுப்புகள் நடத்தப்படுகின்றன. இது தவிர, சனி, ஞாயிறுகளிலும் ஸ்பெஷல் கிளாஸ்தான். இப்படித் தயார் செய்யப்படுவதால்தான் எல்லா ஆண்டுகளிலும் எண்பது சதவிகிதத்திற்கு மேல் மாணவர்கள் தேர்ச்சி பெற்றுக் கொண்டிருக்கிறார்கள்.

மேலும் மாணவர்களை ஊக்கப்படுத்துவதற்காகப் பத்தாவதில் நானூறுக்கு மேல் மதிப்பெண் பெற்றால் கடிகாரம் பரிசு. தவிர, சப்ஜெக்ட் வாரியாகப் பரிசு என்று கொடுக்கிறார்கள். விளையாட்டிலும் இந்தப் பள்ளி சோடை போவதில்லை. மாவட்ட அளவிலான சுழற்கோப்பை இப்போது இவர்கள் கையில்! பொது அறிவு

வளர்ச்சிக்காகத் தினந்தோறும் வரும் முக்கியமான தினசரிச் செய்திகள், வகுப்புகள்தோறும் பொருத்தப்பட்டுள்ள ஸ்பீக்கர்கள் மூலமாக மாணவர்களுக்குப் படித்துக் காட்டப்படுவது இன்னொரு சிறப்பு.

காலை கடவுள் வணக்கத்தின் போது மாணவ, மாணவிகள் அணிவகுத்து நின்று பிராத்தனை செய்வதைப் பார்ப்பது கண்கொள்ளாக் காட்சி. இந்து, முஸ்லீம், கிறிஸ்துவ மதப் பாடல்கள் பாடப்பட்டாலும், வள்ளலாரின் ஜோதி வழிபாட்டுக்கு முக்கியத்துவம் கொடுக்கப்படுகிறது.

திங்கள், வெள்ளி ஆகிய இரு நாட்கள் மட்டும்தான் இப்போது சீருடை போட்டுக் கொண்டு வர வேண்டும். ஏன் வாரத்தில் எல்லா நாட்களும் சீருடை கிடையாதா?

''இங்கு படிக்கிற ஏழை மாணவ, மாணவியரிடம் எல்லா நாட்களும் சீருடை போட்டுக் கொண்டு வரச் சொன்னால், குறைந்தபட்சம் மூன்று செட் சீருடைகளாவது அவர்களிடம் இருக்க வேண்டும். அந்த அளவுக்கு அவர்களுக்கு வசதி கிடையாது!''

இப்போது இன்னொரு புதிய முயற்சியிலும் ஈடுபட்டிருக்கிறது இப் பள்ளி. அதாவது இசைப் பயிற்சியளிப்பதன் மூலம் மாணவர்களின் மனத்தை ஒருமுகப்படுத்தப் பழகச் செய்து, அதைக் கல்வியில் பயன்படுத்தச் செய்யும் முயற்சிதான் அது. ''இதிலும் வெற்றி பெறுவோம்!'' என்கிறார் தலைமையாசிரியர்.

– பிரசன்னகுமார்

# வடம் பிடிக்க வாருங்கள்!

திருவாரூர்தான் தேரழகு என்பதில்லை; கும்பகோணம் சாரங்கபாணிக் கோயிலின் சித்திரைத் தேரும் பேரழகு வாய்ந்ததுதான். எட்ட இருந்து பார்க்கும் போது இத்தேர் அழகிய தாமரை மலர் போலவும் குங்குமச் சிமிழ் போலவும் காட்சி தருவது ஓர் அழகென்றால், அருகில் சென்று பார்க்கும் போது சிற்பங்களின் அழகு.

சித்திரைத் தேர் : வடம் பிடிக்க வழியில்லை...



சக்கரங்களைத் தவிர, தேரின் மற்ற எல்லாப் பகுதிகளிலும் சிற்ப வேலைப்பாடுகள்தான். கிருஷ்ணாவதாரச் சிற்பங்கள், இராமாயணக் காட்சி சிற்பங்கள், தசாவதாரச் சிற்பங்கள், இடையிடையே ஆழ்வார்களின் சிற்பங்கள் என்று முழுதும் சிற்பமயம்தான்!

இருபத்தைந்து அடி அகலமும் இருபத்திரண்டு அடி உயரமும் கொண்ட இந்தத் தேர் அலங்காரத் தோடு நிற்கும் போது எழுபதடி உயரமாகக் காட்சி தருகிறது. முன்பு எட்டாயிரம் பேர் ஒன்றுகூடி வடம் பிடித்து இழுக்க வேண்டியிருந்த இந்தத் தேருக்கு, திருச்சியிலுள்ள பாய்லர் தொழிற்சாலையால் தயாரிக்கப்பட்ட எஃகு அச்சுகளும் ஹைடிராலிக் பிரேக்குகளும் பொருத்தப்பட்டு விட்டதால் இப்போது வடம்பிடித்து இழுப்பதற்கு மூவாயிரம் பேரே போதும் என்கிற நிலை.

ஆயினும் வடம் பிடிக்கத்தான் வழியில்லை. தேர் திருவிழாக்கள் ஆன்மீகம் சம்பந்தப்பட்ட விஷயம் மட்டுமல்ல; ஊர் மக்களின் ஒற்றுமைக்கும் ஓர் எடுத்துக்காட்டு. ஆகவே, பொங்கல் தேர் என்று சொல்லப்படும் சிறிய தேர் ஆண்டு தோறும் ஓடினாலும், பெரிய தேரான சித்திரைத் தேர் பல்லாண்டுகளாக ஓடவில்லை என்பது வருத்தத்திற்குரிய விஷயமே. 1936-க்குப் பிறகு 48 ஆண்டுகள் ஓடாமலிருந்த நிலையை ஸ்ரீமத் ஆண்டவன் சுவாமிகள் 84-ம் ஆண்டு போக்கி வைத்தார் எனினும், அதன் பிறகு இன்னும் ஓடாமலிருப்பது மேலும் வருத்தத்துக்குரிய செய்தியாகத்தான் இருக்கிறது. இதை அனுமதிக்கலாமோ கும்பகோணவாசிகள்?

– பொன். முத்தையன்

# கும்பகோணத்தில் அப்பு செய்து வருவது ஓர் ஒப்பற்ற பணி :



தில்லியில் வேலை பார்த்துக் கொண்டிருந்த அந்த இளைஞன், 1944-ல் ஒருநாள் சுவாமி சிவானந்த சரஸ்வதியின் உபந்யாசத்தைக் கேட்கப் போயிருந்தான். உபந்யாசம் முடிந்தவுடன் கூட்டத்தை ஊடுருவிப் பார்த்தபடி புறப்பட்டுக் கொண்டிருந்த சுவாமிகள் ஒதுக்குப்புறமாக நின்று கொண்டிருந்த அந்த இளைஞனைப் பார்த்து, "you should carry the dead" என்று சொல்லி விட்டுப் புறப்பட்டுப் போய் விட்டார்.

அந்த இளைஞனுக்குச் சில நிமிடங்களுக்கு ஒன்றும் புரியவில்லை. 'சுவாமிகள் எதற்காக இப்படி என்னைப் பார்த்துச் சொன்னார்' என்று குழம்பியபடியே அறைக்கு வந்து சேர்ந்தான்.

சிறிது நேரத்தில் பக்கத்து அறையில் ஏதோ பரபரப்பான சப்தம். சென்று பார்த்தால், சற்று முன்புவரை கூட நல்ல நிலையில் பேசிக் கொண்டிருந்த நண்பருக்கு மாரடைப்பு. இறந்து போய் விட்டார்!

''அன்று முதன் முதலாக அந்த நண்பரின் பிணத்தைச் சுமந்து சென்றவன்தான்! இன்று வரை ஆயிரக்கணக்கான பிணங்களைச் சுமந்து கொண்டு சுடுகாட்டுக்கும், இடுகாட்டுக்கும் சென்று கொண்டிருக்கிறேன்!'' என்று சொல்கிறார் அப்பு.

காசி விஸ்வநாத சந்நிதித் தெருவில் மகாமகக் குளத்தையொட்டி வசிக்கும் அப்புவைத் தெரியாதவர்கள் இருக்க முடியாது. யார் வீட்டிலாவது இறப்பு நேரிட்டால், துக்கம் விசாரிக்க வருபவர்கள், 'சொந்தக்காரர்களுக்குச் சொல்லி அனுப்பி விட்டீர்களா?' என்று கேட்பதை விட, 'அப்புவுக்குச் சொல்லியனுப்பி விட்டீர்களா' என்று

# உற்ற நேரத்தில் ஓர் உதவிக்கரம்!

கேட்பதுதான் அதிகம். அடக்கம் செய்வதற்கோ எரியூட்டுவதற்கோ ஏற்பாடுகள் செய்வதோடு மட்டுமல்லாமல், இறந்தவருக்குத் தோள் கொடுத்துக் கடைசி வரை தூக்கிச் செல்பவர் அப்பு. இதில் ஜாதி, மத வித்தியாசமெல்லாம் பார்ப்பது கிடையாது.

''மரணச் செய்தியை யாராவது என் வீட்டிற்குச் சொல்ல வந்தார்களென்றால் மறைந்த என் தாயார், முதலில் அவர்கள் கையில் ஐம்பது ரூபாயைக் கொடுத்தனுப்பிய பின்னர்தான் என்னிடம் வந்து விஷயத்தைச் சொல்லுவார்!'' என்று தாயைப் பற்றிச் சொல்லி நெகிழ்கிறார் அப்பு.

''மரணம் ஏற்பட்ட குடும்பத்தில் - சோகம் நிறைந்திருக்கும் அந்தச் சூழலில், காரியங்களை எடுத்துச் செய்வதற்கு ஆட்கள் கூட இருக்க மாட்டார்கள். அப்படிப்பட்ட சூழலில், என்னைப் போன்றவர்கள் உதவிக்கரம் நீட்டினால், அந்த குடும்பத்திற்குப் பெரிய ஆறுதலாக இருக்கும். என்னைப் பொறுத்தவரை இந்த சேவையில் எனக்குக் கிடைக்கும் மனநிம்மதியோ அலாதி'' என்று சொல்கிறார் அப்பு.

கிட்டத்தட்ட முப்பது வருடங்கள் போஸ்ட் மாஸ்டராகப் பணிபுரிந்து பென்ஷன் வாங்கிக் கொண்டிருக்கும் அப்பு, கோயில் திருப்பணிகளுக்காகவும் அயராது உழைக்கிறார். இதன் காரணமாகவே இவரைத் தமிழக அரசு, சாரங்கபாணி கோயிலின் அறங்காவலர்களில் ஒருவராக நியமித்திருக்கிறது.

- ராஜகணபதி,
கீழப்பனையூர்
ஜெயாசீனிவாசன்.

# கும்பகோணத்தில் நடந்த 'இன்வெஸ்டிகேஷன்!'






ஆறுபாதி புகழேந்தி என்ற வாசகர் சும்மா இருந்திருக்கக் கூடாதா? எடுத்தார் ஒரு போஸ்ட் கார்டை. 'கும்பகோணத்துக்கு அருகிலுள்ள தாராசுரம் என்ற ஊரில் மூதேவிக்கு ஒரு கோயில் இருக்கிறது' என்று ஆசிரியருக்கு எழுதிப் போட்டு வைத்து விட்டார்.

இது போதாதா ஆசிரியருக்கு? ''அடடே! மூதேவிக்குக் கூட ஒரு கோயிலா! அதிசயமான விஷயம்தான்! அந்த அதிசயக் கோயிலைப் போய்ப் பார்த்து, நீங்கள் அவசியம் படமெடுத்துக் கொண்டுதான் வர வேண்டும்!'' என்று பாதி உத்தரவாகவும் மீதி ஓர் ஆர்வத்தோடும் நாங்கள் புறப்படும்போதே சொல்லி விட்டார் ஆசிரியர்.

ஆசை யாரைத்தான் விட்டது? நாங்களும் தாராசுரம் சென்று தெருத் தெருவாக மூதேவியைத் தேட ஆரம்பித்தோம். கண்ணில் படுகிறவர்களிடமெல்லாம், ''சார், இங்கே மூதேவிக்கு ஒரு கோயில் இருக்கிறதாமே! எங்கே சார்?'' என்கிற கேள்விதான்.

ஊரே சின்ன ஊர். அதில் எத்தனை பேரிடம்தான் புதிதாகப் பார்த்துக் கேட்க முடியும்? அதனால், முதலில் கேட்டவர்களிடமே மறுபடியும் கேட்க ஆரம்பித்தோம். வெறுத்துப் போன ஒருவர், எங்களை ஒரு மாதிரியாக மேலும் கீழும் பார்த்தபடியே, ''இப்படித்தான் சார், முன்பே ஒரு பத்திரிகையில் யாரோ ஒருவர் எழுதியிருந்தார். உள்ளூர்க்காரர்களான நாங்களும் தேடித் தேடி அலுத்துப் போய் விட்டோம். இன்னும் கிடைத்தபாடில்லை. பத்திரிகைக்காரர்களான உங்களுக்குத்தான் இன்வெஸ்டிகேஷனெல்லாம் அத்துபடியாயிற்றே! ஒருவேளை உங்களுக்கு அந்தக் கோயில் கிடைத்தாலும் கிடைக்கும். அப்படிக் கிடைத்தால் சொல்லி விட்டுப் போங்கள். நாங்களும் போய்த் தரிசனம் செய்கிறோம்!'' என்றார் கிண்டலாக.

இந்த இன்வெஸ்டிகேஷன் விஷயம் இத்தோடு போயிற்றா? இன்னொரு பெரும் சோதனை மு. அய்யூப்கான் எழுதிய பேட்டிக் கட்டுரை! என்னதான் இருந்தாலும் அவர் தஞ்சை மாவட்ட எழுத்தாளர் கூட்டமைப்பின் செயலாளரல்லவா! அந்தப் பதவிக்குத் தகுந்த மாதிரி எங்களுக்கும் பெரிதாகவே சோதனை வைத்து விட்டார்!

''தலையில் குடுமி; நெற்றியில் பட்டை. பார்ப்பது குருக்கள் வேலை. ஆனால் பேசுவதோ தி.மு.க. மேடை. இப்படியோர் முரண்பாட்டிலும் உடன்பாடாய் வாழ்ந்து கொண்டிருப்பவர் ரவி குருக்கள். அந்த வித்தியாச இளைஞருடன் இதோ ஒரு பேட்டி....'' என்று போட்டோ, அட்ரஸ் என்று எதுவுமேயில்லாமல், 'தி.மு.க.வில் ஒரு தீவிர குடுமி' என்கிற தலைப்பில் எங்களைக் குண்டக்க மண்டக்க மாட்டி விடுவதற்கென்றே ஒரு பேட்டிக் கட்டுரையை எழுதியனுப்பி விட்டார்.

தெருவுக்கு நாலு கோயில் இருக்கும் கும்பகோணத்தில் போய், அந்தக் குருக்கள் எந்தக் கோயிலில் இருக்கிறார் என்று தேடிப் பிடிப்பது? தற்செயலாக உள்ளூர்ப் பத்திரிகை நண்பர் பாலகடாட்சத்தைப் பார்த்த போது, விஷயத்தைச் சொன்னோம்.

''இங்குள்ள அர்ச்சகர்கள் சங்கத் தலைவரே நான்தான். எனக்குத் தெரிந்து நீங்கள் சொல்லுவது போல் ஒருவர் இருப்பதாகத் தெரியவில்லையே!'' என்று சொல்லி அவரே எங்களைக் கையறு நிலையில் விட்டு விட்டார்.

மூதேவி கோயில் விஷயத்தில்தான் மூக்குடைப்பு என்றால் இதிலும் உடைந்த மூக்கு மேலும் உடைபட வேண்டுமா? யோசித்தோம்.

அரசியல் மேடைகளில் பேசுபவர்கள் பற்றிப் போலீஸ்காரர்களுக்குத் தெரிந்திருக்கும். அதுவும் எதிர்க்கட்சிக்காரர்கள் என்றால் கட்டாயம் தெரிந்திருக்கும். எனவே, போலீஸில் போய் விசாரித்தால் என்ன?

உடனே, கும்பகோணம் வடக்கு காவல் நிலையம் போனோம். சப்-இன்ஸ்பெக்டர் ஜான் பிரிட்டோவிடம் சொன்னோம். ''அப்படியா! ஏதாவதொரு பிரச்னை வரும் என்று தெரிந்தால் ஒரு முன்னெச்சரிக்கை நடவடிக்கையாக நாங்கள் சிலரைக் கைது செய்வோம் என்பது உண்மைதான். 181 பேர் அடங்கிய அப்படியொரு லிஸ்ட் எங்களிடம் இருப்பதும் உண்மைதான்! ஆனால் நீங்கள் சொல்லுகிற அடையாளத்தில் அப்படியொருவர் இருப்பதாகத் தெரியவில்லையே! ம்...'' என்று அவரும் எங்களோடு சேர்ந்து யோசிக்க ஆரம்பித்து விட்டார்.

பிறகு, ''அந்த நபர் தி.மு.க. ஆசாமிதானே? நகர தி.மு.க. செயலாளரிடமே கேட்டு விட்டால் போகிறது...'' என்று டெலிபோனைக் கழற்றிப் பேச ஆரம்பித்தார். ''ஆமாம்! அப்படியொருவர் இருப்பது உண்மைதான். ஆனால் நகருக்குள் அல்ல; நகரையொட்டியுள்ள கொரநாட்டுக் கருப்பூரில்!''




நாங்கள் நன்றி சொல்லி விடைப் புறப்பட்ட போது, ''எப்படியோ! நீங்கள் தேடிய நபரும் கிடைத்து விட்டார். எங்களுடைய லிஸ்டுக்கும் புதிதாக ஓர் ஆள் கிடைத்து விட்டார்!'' என்றார், ஜான் பிரிட்டோ சிரித்துக் கொண்டே!

இரவு. மேலே சுழலும் மின் விசிறி. கீழே தும்பைப் பூ மாதிரி விரிப்புகள் போடப்பட்ட நுரை மெத்தை. அலைச்சல்; மீண்டும் அலைச்சல் என்கிற நிலை. தூக்கம் எப்படிக் கண்களைச் சுழற்றிக் கொண்டு வந்திருக்க வேண்டும்!

ஆனால் யாருக்கும் வரவில்லை. சேச்சே! வீட்டுக்காரியைப் பிரிந்து வந்த சோகம் என்றெல்லாம் சந்தேகமாக ஏதுமில்லை. பிறகு என்னதான் காரணம் என்கிறீர்களா?

''கும்பகோணத்திற்குப் போக
வேணும் - அங்கே
கும்பலிற் சேர்ந்து நடக்கவேணும்!
சம்பளவீரர் பிடிக்க வேணும் - அங்கு
சாவுக்கும் அஞ்சாத தன்மை
வேணும்!

கும்பலும் வீரரும் எதுக்கென்பீர்? -
நல்ல
கும்பகோணத்தில் என்ன என்பீர்?
அம்புபிடித்த கொசுக் கூட்டம் -
அங்கு
ஆட்களை அப்படியே புரட்டும்!''
என்று பாரதிதாசனும் -
''கும்பகோணம் கொசுவுகளா!
கோணை மூஞ்சிப் பவிஷுகளா!
கண்டவரையெல்லாம் கடிக்கும்
கருப்பண்ணசாமிகளா!
கடிக்கலாகுமா? ரத்தம்
குடிக்கலாகுமா?
மனுஷன் பிழைக்க
வேண்டாமா?''

- என்று கும்பகோணம் வந்திருந்த நாடகக் குழுவொன்றும் அந்தக் காலத்திலேயே ரொம்பவும் நொந்து போய்ப் பாடி வைத்திருந்ததை வாசகர்கள் 'ஸ்நேகா'வும் எம். சேகரும் நமக்குக் கடிதம் எழுதி எச்சரித்திருந்தார்களே, அந்தக் கொசுக் கடிதான் காரணம்!

சும்மா சொல்லக் கூடாது. ஒவ்வொன்றும் 'ராஜபாளையம்' கடி!

- இளங்கோவன்




# யாகம் நடந்த பூமியும் வேத பாடசாலையும்!

கும்பகோணத்தில் சக்கரைப் படித் துறை அருகிலுள்ள யாகசாலைத் தெரு வழி யாகச் செல்லும் போது, ஒரு கட்டடத்தி லிருந்து வேத பாராயண ஒலியின் கம்பீரம் கொஞ்சம் நின்று கேட்கத் தோன்றும். உள்ளே சென்று பார்த்தால், வேதங்கள், காவ்யங்கள் ஆகியவைகளைச் சொல்லிக் கொடுக்கும் உபாத்யாயர்களையும், அவர் களின் எதிரே அந்தக் கால சிஷ்யர்களின் பாவனையில் அமர்ந்து கொண்டு, பாராய ணம் பண்ணும் இளம் மாணவர்களையும் காணலாம். சுமார் 120 மாணவர்கள் வேதம் கற்கும், இந்த குருகுலத்தின் பெயர் ஸ்ரீ ராஜா வேத காவ்ய பாடசாலை.

பதினாறாம் நூற்றாண்டில், தஞ்சையை ஆண்ட நாயக்க மன்னர்களான சேவப்பன், அச்யுதப்பன், ரகுநாதன் ஆகியோருக்குக் குலகுருவாகவும் அமைச்சராகவும் சேனாதி பதியாகவும் வழிகாட்டியாகவும் விளங்கி யவர் ஸ்ரீகோவிந்த தீட்சிதர். வேத நெறி யையே தம் வாழ்க்கையின் குறிக்கோளாகக் கொண்டு வாழ்ந்த இவர், அந்தணராக இருந் தாலும், ஒரு மாபெரும் வீரர், அரசியல் வித் தகர். அந்தணனாகப் பிறந்தவன் எந்த தொழி லைச் செய்தாலும், தன்னுடைய குலாசா ரத்தை அனுசரிக்க முடியும் என்று நிரூபித் துக் காட்டியவர். (அவருடைய வழித்தோன் றல்தான் காஞ்சி பரமாச்சாரியார்).

இப்படிப்பட்ட கோவிந்த தீட்சதர் 1542-ல், காவிரிக்கரையில் ஒரு ஸோம யாகத்தை நடத்தினார். பின்னர் அதே பூமி யில், நான்கு வேதங்கள், ஆறு அங்கங்கள், மீமாம்ஸா, வேதாந்தம் போன்ற சாஸ்தி ரங்கள், சங்கீதம், நாட்டியம், ஆக மம் ஆகியவற்றைப் போதிக்க நிறுவியதுதான் இந்த வேதபாட சாலை!

சுமார் 450 வருடங்களாக நடைபெற்று வரும், இந்த வேத பாடசாலையில் பயின்றோர் பலர், வேதங்களிலும் காவ் யங்களிலும் (சமஸ்கிருதம்) சிறந்து விளங்கிப் புகழ் பெற்றிருக்கின்றனர். எட்டி லிருந்து பத்து வயதுக்குட் பட்ட பிராமண மாணவர் கள் இங்கே சேர்த்துக் கொள்ளப்படுகிறார்கள். எல்லாம் இலவசமாகப் பத்து வருடங்கள் பயிற்சி கொடுக்கப்படு கிறது. பயிற்சியின் முடி வில் பரீட்சை என்று எதுவும் கிடையாது என்றாலும், கற்றுக் கொடுப்பதை மாண வன் நன்றாக கிரகித்துக் கொள்ளும்படி பயிற்சி அமைகிறது.

வேதங்கள் படிக்கும்போதே வாழ்க் கைக்குத் தேவையான ஆங்கிலம், கணிதம் ஆகியனவும் கற்றுக் கொடுக்கப்படுகின்றன. இப்போது அதர்வண வேதம், நாட்டியம் ஆகியவை கற்றுக் கொடுப்பதில்லை.

இந்தப் பாடசாலையை நடத்தும் பொறுப்பை, ''புண்ய ஸ்மரண நிதி'' என்ற அமைப்பு ஏற்றுக் கொண்டிருக்கிறது. ஆஸ் திக அன்பர்கள் கொடுக்கும் நன்கொடை களை மட்டுமல்லாமல், பழங்கால குருகுல முறை வேத அத்யயனத்தை ரட்சிக்கும் திட் டத்தில், மத்திய அரசு கொடுக்கும் நிதியுதவி யையும் கொண்டு நடத்தப்படுகிறது. வருடா வருடம் வேதம் படிப்பவர்களின் எண்ணிக்கை உயர்ந்து கொண்டே போகிற தாம்.

இங்கு படிப்பவர்களுக்கு வேலை வாய்ப்பு எப்படி? இந்தக் கேள்வியை ப்ரதான அத்யாபகர் வி. ராமநாதஸாம வேதியிடம் கேட்டோம்.

''சமஸ்கிருதப் பள்ளிகள், கல்லூரிகள், ஆராய்ச்சி நிலையங்கள் போன்றவற்றில் வேலை வாய்ப்பு உண்டு. அது தவிர, திருப்பதி தேவஸ்தானத்தின் வேத ஆராய்ச்சி நிலையத்தில் பணிபுரியவும் மற்றும் பல கோயில்களில் வேதபாராயணம் செய்யவும் வாய்ப்புக் கிடைக்கிறது. தவிர, எங்க விடமே உபாத்யாயர்களாகவும் சிலர் வேலை செய்கிறார்கள்.''

– ஞானகிமணாளன்,
எஸ். தேவாதிராஜன்

# புதுமைத் திட்டம் No. 3
# ''லில்லி'' உள்பாவாடைகள்

## திட்டத்தின் விபரம் :

1. ரூ. 300/-ஐ D.D. அல்லது M.O. மூலம் P.R.C. கார்மெண்ட்ஸ் என்ற எங்கள் நிறுவனத்திற்கு செலுத்துங்கள். இத் திட்டத்தில் முதலில் வரும் 5000 உறுப்பினர்கள் மட்டுமே சேர்த்துக் கொள்ளப்படுவார்கள்.

2. பணம் கிடைக்கப் பெற்றவுடன் உடனடியாக ரூ. 84/- மதிப்புள்ள இரண்டு 'லில்லி' உள்பாவாடைகள் (Normal Size) உங்களுக்கு பதிவுத் தபால் மூலம் எங்கள் செலவிலேயே அனுப்பி வைக்கப்படும்.

3. நீங்கள் பணம் செலுத்தியதிலிருந்து ஒவ்வொரு ஆண்டு இறுதியிலும் ரூ. 84/- மதிப்புள்ள இரண்டு 'லில்லி' உள்பாவாடைகள் (Normal Size) ஆண்டுக்கு ஒருமுறை விதம் தொடர்ந்து ஆறு ஆண்டுகளுக்கு பதிவுத் தபால் மூலம் எங்கள் செலவிலேயே அனுப்பி வைக்கப்படும்.

4. பணம் கிடைக்கப் பெற்ற தேதியிலிருந்து 84 மாதங்கள் (7 ஆண்டுகள்) நிறைவு பெற்றவுடன் ரூ. 600/- ஆக உங்களுக்கு வழங்கப்படும்.

5. நீங்கள் பணம் செலுத்தியவுடன் ரூ. 84/- மதிப்புள்ள இரண்டு 'லில்லி' உள்பாவாடைகளுடன் (Normal Size) 7 ஆண்டுகள் கழித்து ரூ. 600/- திரும்பப் பெறுவதற்கான Repayment Gaurantee Card உடனடியாக வழங்கப்படும்.

| | நீங்கள் செலுத்தும் தொகை | பணம் செலுத்தியவுடன் | முதலாம் ஆண்டு இறுதியில் | இரண்டாம் ஆண்டு இறுதியில் | மூன்றாம் ஆண்டு இறுதியில் | நான்காம் ஆண்டு இறுதியில் | ஐந்தாம் ஆண்டு இறுதியில் | ஆறாம் ஆண்டு இறுதியில் | 7 ஆண்டு முடிந்தவுடன் திரும்ப பெறும் தொகை | மொத்தம் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| வழக்கமான அளவு இடுப்பு சுற்றளவு 35"/88செமீ | ரூ 300/- | ரூ 84/- மதிப்பு | ரூ 84/- மதிப்பு | ரூ 84/- மதிப்பு | ரூ 84/- மதிப்பு | ரூ 84/- மதிப்பு | ரூ 84/- மதிப்பு | ரூ 84/- மதிப்பு | ரூ 600/- | ரூ 1188/- |
| Spl Size [illegible] 40"/102 Cms. | ரூ 350/- | ரூ 100/- மதிப்பு | ரூ 100/- மதிப்பு | ரூ 100/- மதிப்பு | ரூ 100/- மதிப்பு | ரூ 100/- மதிப்பு | ரூ 100/- மதிப்பு | ரூ 100/- மதிப்பு | ரூ 700/- | ரூ 1400/- |

Normal Size, மற்றும் Spl. size-ல் கிடைக்கும் உயரங்கள் : 90, 95, 100 & 105 செ.மீ.

*பங்கு கொள்வீர்!* *பயன் பெறுவீர்!!*

பணம் அனுப்ப வேண்டிய முகவரி :


**P.R.C. கார்மெண்ட்ஸ்**

*26, பிரதட்சணம் ரோடு, 'ஏ' பிளாட்,*

*கரூர் - 639 002.* *போன் : 21946*


எங்கள் நிறுவனம் 1984-ல் பாரத பிரதமரின் படித்த இளைஞர்களுக்கான வேலை வாய்ப்பு திட்டத்தின் கீழ் கரூர் கிளை கனரா வங்கியின் பொருளாதார உதவியுடன் துவக்கப்பட்டு செயல்பட்டு வருகிறது.

குறிப்பு :
- ★ நீங்கள் செலுத்தும் தொகை முழுமையாக, 65 ஆண்டுகளாக மக்கள் சேவையில் ஈடுபட்டிருக்கும் கரூர் 'தி லக்ஷ்மி விலாஸ் பாங்க் லிட்'-ல் டெபாசிட் செய்யப்படும்.
- ★ மேற்படி டெபாசிட் தொகையிலிருந்து எங்கள் நிறுவனத்தின் நடைமுறை மூலதனத்திற்காக (Working Capital) வங்கியிலிருந்து கடன் வசதி பெற்றுக் கொள்ளப்படும்.
- ★ Spl. Size (ஸ்பெஷல் சைஸ்) வேண்டுவோர் ரூ. 350/- செலுத்தவும்.
- ★ உங்களுக்கு தேவையான கலர் மற்றும் அளவுகளை குறிப்பிட்டு எழுதினால் அதன்படி அனுப்பி வைக்கப்படும்.
- ★ வெளிநாட்டில் வசிக்கும் இந்தியர்கள் இத் திட்டத்தில் பங்கு பெறலாம். 'லில்லி' உள்பாவாடைகள் மற்றும் இதர கடிதத் தொடர்புகள் அவர்களுடைய இந்தியாவில் உள்ள விலாசத்திற்கு மட்டுமே அனுப்பி வைக்கப்படும்.



* மகாமகக் குளம்



* எம்.வி. வெங்கட்ராம்



* பொதியவெற்பன்



* ஜான் பிரிட்டோ



* தொண்டாடிப் பொடி



* ராஜேஸ்வரி

# பத்து கோணங்களில் கும்பகோணம்!

●● மகாமகத்தின் போது கும்பகோணம் போய் மகாமகக் குளத்திலுள்ள புண்ணிய தீர்த்தங்களில் நீராடிவிட்டு வந்தால் மட்டும் போதாது. அங்கு பொன், பூமி, கன்னி, வஸ்திரம், பசு, குதிரை, காளை, அன்னம், தென்னை, பூசணி, சந்தனம், முத்து, நவரத்தினம், உப்பு, தேன், பழங்கள் என்று பதினாறு வகை தானங்களும் செய்துவிட்டு வரவேண்டும். அதற்காகவே மகாமகக் குளத்தைச் சுற்றிலும் பதினாறு மண்டபங்கள் கட்டப்பட்டிருக்கின்றன. அவற்றுக்குத் தான மண்டபங்கள் என்றே பெயரிட்டிருக்கிறார்கள்.

●● கும்பகோணத்திலுள்ள ஆண்கள் கலைக் கல்லூரி 1854 - ம் ஆண்டு துவக்கப்பட்டது. ஆனால் கல்லூரியாக அல்ல; பள்ளிக் கூடமாக! திவான் பகதூர் கே. இரகுநாதராவ் என்பவர் தமது நண்பர்கள் மற்றும் அண்டை வீட்டுக் குழந்தைகள் ஆங்கிலம் பயில்வதற்கென்றே இப்பள்ளியைத் தோற்றுவித்ததாகச் சொல்கிறார்கள். பிறகுதான் இது கல்லூரியானது. அந்தக் காலத்தில் தென்னிந்தியாவிலேயே திருச்சி செயின்ட் ஜோசப் கல்லூரி, சென்னை மாநிலக் கல்லூரி மற்றும் கிறிஸ்துவக் கல்லூரி, மசூலிப்பட்டினம் நோபல் கல்லூரி, கும்பகோணம் கல்லூரி ஆகிய ஐந்து கல்லூரிகள்தான் இருந்தன!

●● முழுக்க முழுக்கச் சுத்தமான பசும்பாலில் டிகிரி காப்பி குடிக்க ஆசையா? வேறு வழியில்லை; கும்பகோணத்திலுள்ள 'ஸ்ரீலக்ஷ்மி விலாஸ் பசும்பால் காப்பி கிளப்'புக்குத்தான் போயாக வேண்டும். பசும்பாலுக்காக ஹோட்டல்காரர்கள் சொந்தமாகவே மாடு வைத்துக் கறக்கிறார்கள். பசும்பால் தீர்ந்துவிட்டால் டிகிரி காப்பி கொடுப்பதில்லை; இல்லையென்று சொல்லி விடுகிறார்கள். அப்பா பஞ்சாபகேச அய்யர் துவங்கி வைத்த இந்த ஹோட்டலை இப்போது அவரது வாரிசுகள் நடத்தி வருகிறார்கள். என்றாலும் இன்னமும் 'பஞ்சாபி அய்யர் ஹோட்டல்' என்றால்தான் அனைவருக்கும் தெரியுமே தவிர, 'லக்ஷ்மி விலாஸ் பசும்பால் காப்பி கிளப்' என்றால் கண்டுபிடிப்பதே கஷ்டமாகி விடும்!

●● ஜி.கே. ராஜேஸ்வரிக்கு 46 வயது. பிறவியிலேயே பார்வை கிடையாது. ஆனாலும் சின்ன வயதிலிருந்தே சங்கீதம் அத்துபடியானது. பத்தாவது வயதிலிருந்தே கச்சேரி செய்ய ஆரம்பித்து விட்டார். வானொலியிலும் திரையப் பாட ஆரம்பிக்க, 'கானசுதாகரி', 'கானகலா பூஷணி' என்று பட்டங்களும் கிடைத்தன. நிலைய வித்வானாக வானொலியிலேயே பணியாற்றும் வாய்ப்புக் கிடைத்தும், பார்வைக் குறை காரணமாக ஒப்புக்கொள்ள மறுத்து விட்டார். ''பார்வையில்லை என்பது ஒரு குறையாக இருந்தாலும் வருத்தமாக இல்லை. காரணம், சங்கீதம்தான்!'' என்கிறார் அவர்.

●● எம்.ஜி.ஆர். மூன்றாம் வகுப்பு வரை படித்தது கும்பகோணத்திலுள்ள யானையடி பள்ளிக்கூடத்தில்தான்.




* எம்.ஜி.ஆர். படித்த பள்ளி




* பஞ்சாமி அய்யர் ஹோட்டல். (படம் : தேவாதி ராஜன்)

எம்.ஜி.ஆர். படித்தபோது இருந்த இடத்தில் இப்போது அந்தப் பள்ளிக்கூடம் இல்லை; பக்கத்திலுள்ள சாரங்கபாணி சந்நிதித் தெருவுக்கு மாற்றிவிட்டார்கள். பெரிய சத்துணவுக்கூடம் மாதிரி ஆஸ்பெஸ்டாஸ் கூரைபோட்ட அந்தப் பள்ளிக்குள் போனதுமே, ''இதுதான் சார் ரெக்கார்டு; எம்.ஜி. ஆர். பள்ளியில் சேர்ந்த தேதி : 7.12.22. டி.சி. வாங்கிய தேதி : 27.7.25. பிறந்த தேதி : 25.5.16....'' என்று டேப் செய்த மாதிரி ஒப்புவிக்கிறார்கள் ஆசிரியர்கள்!

●● எம்.ஜி.ஆர். படித்தது மாத்திரமல்ல; கணித மேதை ராமானுஜம், வரலாற்றாசிரியர் சதாசிவ பண்டாரத்தார் என்று ஏகப்பட்ட மேதைகள் படித்ததும் கும்பகோணத்தில்தான். எழுத்தாளர்கள் கு.பா. ராஜகோபாலன், ந. பிச்சமூர்த்தி, தி. ஜானகிராமன்... என்று எழுத்துலக பிரம்மாக்கள் என்று சொல்லப்படுகிற ஏராளமான எழுத்தாளர்கள் பிறந்து, வளர்ந்து, வாழ்ந்த பெருமையும் கும்பகோணத்துக்கு உண்டு.

●● இப்போதும் டவுன் ஹைஸ்கூல் எதிரிலுள்ள தொண்டரடிப் பொடி என்பவரின் கடையில்தான் எழுத்தாளர் கு.பா. ரா. பெரும்பகுதி நேரத்தைச் செலவழிப்பார். எனவே, அவரைப் பார்க்க விரும்பும் அவரது சிஷ்யர்களும் சக எழுத்தாளர்களும் அந்தக் கடைக்கே வருவார்கள் என்பதால், 'தொண்டர் கடை' என்பது எழுத்தாளர்கள் மத்தியில் ரொம்பவும் பிரபலமாகிவிட்டது. ''நாம் எழுதப் போகும் கதையின் கருபற்றி அவ்வப்போது பேசுவார் கு.பா. ரா. அப்போது கேட்க சாதாரணமாகத்தான் இருக்கும். எழுதிய பிறகு படித்துப் பிரமித்துப் போவேன்!'' என்கிறார் தொண்டரடிப் பொடி.

●● மணிக்கொடி கால எழுத்தாளர்களுக்குத் தொண்டர் கடை என்றால் இப்போதை எழுத்தாளர்களுக்கு 'சிவிக்குவில்' என்னும் புத்தகக்கடை. உரிமையாளர், மார்க்சிய - லெனினியத் தத்துவத்தில் நம்பிக்கை கொண்ட பொறியவெற்பன். தமது தத்துவத்தோடு ஒத்துப் போகிற எழுத்துக்களை மட்டுமே புத்தகமாக வெளியிட்டுக் கொண்டிருந்தாலும் தமது கொள்கையோடு முரண்பாடுடைய எழுத்தாளர்களுக்கும் இவரொரு நம்பிக்கையான நண்பர் என்று பலரும் புகழ்கிறார்கள்!

●● கும்பகோண மக்கள் ஆச்சரியத்தோடு பாராட்டும் நபர், வடக்கு காவல் நிலையத்தின் சப்-இன்ஸ்பெக்டர் ஜான் பிரிட்டோ. ''அமைச்சர் சிபாரிசு செய்தால் கூட இவர் நேர்மைக்குப் புறம்பாக நடப்பதில்லை!'' என்று ஆளுங்கட்சிக்காரர்களே புகழ்கிறார்கள். ''இப்படியெல்லாம் இருந்தால் அடிக்கடி மாற்றல் உத்தரவு வந்து கொண்டேயிருக்குமே?'' என்ற போது, ''எங்கே மாற்றினால் என்ன, எனக்கென்று ஒரு நாற்காலியும் மேஜையும் கொடுத்துத் தானே ஆக வேண்டும்! அப்புறமென்ன?'' என்கிறார். இந்த காக்கிச் சட்டைக்காரர், பத்திரிகைகளில் சிறுகதைகள் எழுதுவது ஓர் ஆச்சரியமென்றால், அவ்வப்போது மேடைகளில் ஏறிச் சமூகச் சீர்கேடுகள் பற்றியும் அரச எந்திர முறைகேடுகள் பற்றியும் ஆவேசமாகச் சாடுகிறார் என்பது இன்னோர் அதிசயம்!

●● அந்தக்கால எழுத்தாளர்களுக்கும் இந்தக்கால எழுத்தாளர்களுக்கும் ஏதாவது வித்தியாசம் காண்கிறீர்களா? - இந்தக் கேள்வியை, மூத்த தலைமுறை எழுத்தாளர்களில் ஒருவரான எம்.வி. வெங்கட்ராமைச் சந்தித்த போது கேட்டோம். ''இந்தக் கால எழுத்தாளர்களின் எழுத்துக்களிலும் சிறப்பான விஷயங்கள் இருக்கின்றன என்பதில் சந்தேகமில்லை. ஆயினும் அந்தக்கால எழுத்தாளர்களிடம் இல்லாத நோர் 'ஜாதியப் பார்வை' இன்றைய எழுத்தாளர்களிடம் இருப்பது மிகவும் வருந்தத் தக்கது'' என்றார்.

- இடவை எழில், கே.எஸ். ரங்காச்சாரி, சிவ. சீனிவாசன். மீ. கண்ணன், டி.எஸ். சீதாராமன்



"தொடரும் இனிய உறவுகள்..."

# அனுபவம் காட்டிய பாதை

திடீரென எனக்கு உடல் நலக் குறைவு ஏற்பட்டது. மருத்துவ மனைக்குச் சென்றபோது, அறுவை சிகிச்சை தேவை என்றார்கள். பணத்துக்கு என்ன செய்யலாம் என்றெல்லாம் நான் கவலைப்படவில்லை. அதற்குக் காரணம் இருந்தது.

எந்த நேரமும் பணத் தட்டுப்பாடு வரும் என்பது எனக்குத் தெரியும். முன்னெச்சரிக்கையாக ஸ்ரீராமில் சீட்டு கட்டி வந்தேன். அது இப்போது எனக்கு உதவியது.

இந்த முன்னெச்சரிக்கை உணர்வு எனக்கு எப்படி ஏற்பட்டது?

காலத்தில் சற்றுப் பின்னோக்கிச் செல்ல வேண்டும்.

என் தம்பிகள் இருவரும் கல்லூரியில் சேர்ந்த நேரம். அதற்கான செலவுகளைப் பூர்த்தி செய்து அப்பா நிம்மதிப் பெருமூச்சை வெளியேற்றிய போதுதான் இன்னொரு நெருக்கடி விசுவரூபம் எடுத்தது.

நிலத்துக்காக வாங்கியிருந்த ரூ.10,000 கடனை உடனே அடைக்க வேண்டிய அவசரம். பணம் செலுத்தாவிட்டால் ஜப்தி என்கிற பய முறுத்தல் வேறு.



அப்பா கலங்கவில்லை. ஸ்ரீராமில் அவர் சீட்டு கட்டி வந்தார். அது இந்த நெருக்கடியிலிருந்து அவரைக் காப்பாற்றி விட்டது.

அப்போதுதான் முதல் முதலாக ஸ்ரீராமைப் பற்றித் தெரிந்து கொண்டேன். எந்தவொரு நெருக்கடியையும் எதிர்பார்த்து முன்னச்சரிக்கையாக இருக்க வேண்டும் என்பதையும் தெரிந்து கொண்டேன்.

இப்போதெல்லாம் ஒரு சீட்டு முடிந்தவுடன் மற்றொன்றில் சேர்ந்து விடுகிறேன். அனுபவம் காட்டிய பாதை.

எம். சித்ரா,
மன்னார்குடி – 614001

# வீதிதோறும் சேவை நிலையங்கள்!

தெருவுக்குத் தெரு கோவில்கள்தான் என்பதில்லை; ஏறத்தாழ ஒவ்வொரு தெருவிலும் ஏதாவதொரு சமூக நற்பணி மன்றமும் இருக்கிற ஊர் கும்பகோணமாகத்தான் இருக்க முடியும்.

மேட்டுத் தெருவில் உள்ளது காந்தியடிகள் நற்பணிக் கழகம். 1975-ல் கு. பாலசுப்ரமணியன் தலைமையில் ஐந்து மாணவர்களுக்கு இலவசக் கல்விப் பயிற்சி கொடுக்க ஆரம்பிக்கப்பட்ட இந்த நிலையத்தில், இன்று நூற்றுக்கணக்கான மாணவ - மாணவியருக்குப் பதினைந்து ஆசிரியர்களால் இலவசக் கல்விப் பயிற்சி அளிக்கப்பட்டு வருகிறது. பத்தாம் வகுப்பில் தோல்வியுற்றோருக்குத் தனிப் பயிற்சி, முதியோர் கல்வி, ஹிந்தி மொழிப் பயிற்சி என்று எல்லாம் இலவசம்.

இதில் சிறப்பு என்னவென்றால், பயிற்சி கொடுக்கும் ஆசிரியர்களும், சம்பளம் வாங்காமல், சேவை செய்வதுதான். ''பொருளாதாரம் கல்விக்குத் தடையாக இருக்கக் கூடாது என்ற அடிப்படையில்தான் இந்த இலவசப் பயிற்சியைத் துவக்கினோம். ஆனால் அரசிடமோ, தனியாரிடமோ எந்தவிதமான நிதியுதவியுமில்லாமல் செயல்பட்டு வருவதால் பொருளாதார நிர்ப்பந்தம் காரணமாக மேலும் மேலும் விரிவாக்கம் செய்ய முடியாத நிலையிலிருக்கிறோம்'' என்று சொல்கிறார் பாலசுப்பிரமணியம்.

கும்பகோணம் இருதய ஆண்டவர் மருத்துவமனையைப் பற்றித் தெரியாதவர்கள் அந்தப் பகுதியில் இருக்க முடியாது. தொழுநோய் பிடித்தவர்களை, நாடும், வீடும் துரத்தியடித்த போது, ''இங்கே வாருங்கள், உங்களை நாங்கள் பார்த்துக் கொள்கிறோம்!'' என்று கனிவான மொழி பேசி, ஆதரவுக் கரங்களை நீட்டியவர்கள் அருட்தந்தை மி சோட்டே, சகோதரி கரோலின், சகோதரி பிரிட்டோ ஆகியோர்.

திருநாகேஸ்வரம் போகும் வழியில் உள்ள சாக்கோட்டையில் அவர்கள் 1916-ல் துவக்கிய தொழுநோய் மருத்துவமனை இன்று ஆல் போல் தழைத்திருக்கிறது. துவக்கக் காலத்தில் குடிசைகளில்தான் நோயாளிகள் தங்க வைக்கப்பட்டனர். ஜெர்மனியைச் சேர்ந்த சகோதரி கரோலினும் தொழுநோயால் பாதிக்கப்பட்டவர்தான் என்றாலும் தம் வேதனைகளைச் சகித்துக் கொண்டு, சேவை மனப்பான்மையை மற்றவர்களுக்கு உணர்த்தியவர் அவர்.

வருடங்கள் ஆக, இந்த மருத்துவமனையின் சேவை, மத்திய, மாநில அரசுகளின் கவனத்தை ஈர்க்க, அரசு உதவியும் கிடைத்தது. இன்று நூற்றுக்கணக்கானவர்கள் உள் நோயாளிகளாகவும், ஆயிரக்கணக்கானவர்கள் புறநோயாளிகளாகவும் இங்கு சிகிச்சை பெற்று வருகிறார்கள்.

முற்றிலும், குணமடைந்த தொழுநோயாளிகளுக்குப் புனர்வாழ்வு கொடுக்கப்படுகிறது என்பது இந்த மருத்துவமனையின் இன்னொரு சிறப்பு. கைவினைப் பொருட்கள் செய்ய பயிற்சியளிக்கப்படுகிறது. இந்த நோய் கண்டோருக்கு விரல்களில் பாதிப்பு உண்டாகுமாதலால் அவர்கள் வசதிக்குத் தகுந்த மாதிரி தொழில் கருவிகள் தயார் செய்யப்படுகின்றன. இது தவிர, கால்நடை வளர்ப்பு, பெட்டிக் கடை, சைக்கிள் கடை ஆகியவைகள் வைக்கவும், நிதியுதவி செய்து வருகிறது.

நெடுங்காலமாக இதுபோன்ற மருத்துவமனைகளுக்கு நிதியுதவி அளித்து வந்த மேல்நாட்டு சமூக சேவை அமைப்புகள் இப்போது உதவியைக் கணிசமாகக் குறைத்து விட்டன. காரணம், அந்தந்த அமைப்புகள் உள்ள நாடுகளில் ஏற்பட்டிருக்கும் 'எய்ட்ஸ்' நோய். அதற்குச் செலவு செய்வதிலேயே அவை முழு கவனம் செலுத்துகின்றனவாம். அதனால் இங்கேயே நிதி ஆதாரத்தை உருவாக்கும் முயற்சியிலும் இப்போது ஈடுபட்டு வருகிறார்கள்.

இதே குடந்தையில் தொழுநோய் ஒழிப்புப் பணியில் ஈடுபட்டிருக்கும் மற்றொரு நிறுவனம், இந்து மிஷன் மருத்துவமனை. சங்கராச்சார்யார் ஆசியோடு துவக்கப்பட்ட இது கடந்த 13 வருடங்களாகச் செயல்பட்டு வருகிறது.



''மனவளம், உடல்நலம் ஆகியவைகளைப் பெற, தினமும் தவறாமல் உடற்பயிற்சி செய்தாலே போதுமானது!'' என்று சொல்

* லயன்ஸ் கிளப் : இலவசத் திருமணங்கள்



* காந்தி நற்பணிக் கழக மாணவ - மாணவியர்...

றார்கள் சௌராஷ்ட்ரா உடற்பயிற்சி நிலையத்தைச் சேர்ந்த இளைஞர்கள். அரசலாற்றங் கரை ஓரமாகக் கடந்த ஐம்பது ஆண்டுகளாக நடைபெற்று வரும், இந்த உடற்பயிற்சி நிலையத்தில் வெயிட் லிப்டிங், பவர் லிப்டிங், பீல்டு எக்ஸர்சைஸ், பேரலல் பார் ஆகியவைகளில் பயிற்சி கொடுக்கப்படுகிறது.

இந்த நிலையத்தில் பயிற்சி பெற்றவர்கள் தேசிய, மாநில, மாவட்ட அளவில், எடை தூக்கும் போட்டிகளில் கலந்து கொண்டு சாதனை புரிந்திருக்கிறார்கள். 1989-ல், அகில இந்திய கிராமப்புற மக்களுக்கான விளையாட்டுப் போட்டிகளில் 72.5 கிலோ எடைதூக்கி சாதனைபுரிந்த செந்தில் குமார் ''தேசிய அளவில் சாம்பியனாவதே என் லட்சியம்!'' என்று சொல்கிறார்.

மகாமகத்தின் போது, பல நற்பணி மன்றங்கள், நகரைச் சுத்தமாக வைத்துக் கொள்ளும் பணியில் இறங்கின. கும்பேஸ்வரர் கோயில் வெளிப்பிராகாரத்தில், செடிகளும் புதர்களும் மண்டிக் கிடந்தன. அதைச் சுத்தம் செய்தார்கள் எவரெஸ்ட் நற்பணி மன்றத்தைச் சேர்ந்த இளைஞர்கள். இது தவிர சாலைச் சீரமைப்பு, தெருவிளக்குப் பராமரிப்பு, குழந்தைகளுக்குப் பாடம் சொல்லிக் கொடுத்தல் என்று பல நற்பணிகளைச் செய்து வருகிறார்கள் இந்த அமைப்பைச் சேர்ந்த இளைஞர்கள்.

கும்பகோணத்தில் ஜவ்ஸ் கிளப்பைத் தெரியாதவர்கள் இருக்கவே முடியாது. ஜவ்ஸ் கிளப் செய்து வரும் நற்பணிகள் ஏராளம். ஏழை மாணவர்களுக்குக் கல்வி கற்க நிதியுதவி, தொழுநோயாளிகளுக்குச் சுயவேலை வாய்ப்பு ஏற்படுத்திக் கொடுத்தல், ஏழைகளுக்கு இலவசத் திருமணம் செய்து வைத்தல் என்று இதன் நற்பணிகளைப் பட்டியலிட்டுக் கொண்டே போகலாம்.



* தொழுநோயாளிகளுக்குக் கனிவான கவனிப்பு...

மேலே குறிப்பிட்ட அமைப்புகள் மட்டுமல்லாமல், நேரு நற்பணிக் கழகம், குடந்தை பெருநகர இளைஞர் நற்பணி இயக்கம், சௌராஷ்ட்ரா நடுத்தெரு இளைஞர் நற்பணி மன்றம், சமுதாய விழிப்புணர்ச்சி இயக்கம் என்று ஏகப்பட்ட அமைப்புகள். இந்த அமைப்புகளிடையே, ''வழக்கமாகத் தொண்டு செய்வதையே நோக்கமாகக் கொண்ட நாங்களும் இருக்கிறோம்!'' என்று குரல் கொடுக்கிறார், ரோட்டரி கிளப் ஜெகந்நாதன்.

போலியோவால் கால்கள் பாதிக்கப்பட்டவர்களுக்குச் செயற்கைக் கால்கள் வழங்குகிறார்கள் ரோட்டரிக்காரர்கள். தவிர, ''கும்பகோணத்தில் தடுப்பு முறைகளைக் கையாண்டு குழந்தைகளைப் போலியோ தாக்காமல் இருக்கவும் நூறு சதம் வெற்றி பெற்று விட்டோம்!'' என்றும் சொல்கிறார்கள்.

- கமலா கோபால், எஸ். கல்யாணராமன், சிந்துபாரதி, மோகன், ஆர். கே. மூர்த்தி, என். பச்சையப்பன், எம். எம். லட்சுமணன், குடந்தை ரமேஷ், பிரசன்னகுமார், தமிழ்ப்பிரியன்.



* உடற்பயிற்சிக் கழகம் உருவாக்கிய சாம்பியன்




நாளை...

ஜெயிக்கிறது, யாருனு பார்த்திடுவோம்!









# ‘கும்பகோண வேலை’ என்றால் என்ன?




எத்தனையோ விஷயங்களுக்காகக் கும்பகோணம்வாசிகள் பெருமைப்பட்டுக் கொண்டாலும் யாராவது ‘‘ஓகோ! நீங்கள் ‘கும்பகோண’த்துக்காரரா?’’ என்று நமுட்டுச் சிரிப்புடன் கேட்கும் போது கூச்சப்பட்டுத்தான் போகிறார்கள்.

காரணம், ‘கும்பகோண வேலை’ என்பதற்கு ஏமாற்று வேலை என்று ஆங்கில அகராதியிலேயே அர்த்தம் போட்டிருப்பதுதான். இப்போது அந்த வார்த்தை அகராதியிலிருந்து எடுக்கப்பட்டு விட்டாலும் நமுட்டுச் சிரிப்பு நண்பர்கள் இன்னும் அதை விடுவதாயில்லை. ஆனாலும் இனி கும்பகோணம் வாசிகள் யாருக்காகவும் கவலைப்படத் தேவையில்லை. ஏனெனில் அகராதியில் அப்படியொரு அர்த்தம் வரக் காரணமாயிருந்த கதை கௌரவமான கதைதான்!




இந்த நூற்றாண்டின் ஆரம்பத்தில், கும்பகோணத்தில் மிகவும் பிரபலமாயிருந்த வக்கீல், சீனிவாச அய்யர் என்பவர். அவர் ஒருமுறை தமது குடும்பத்தாரோடு சென்னையிலிருந்து கும்பகோணத்துக்கு ரயிலில் பயணம் செய்து கொண்டிருந்தார்.

அதே பெட்டியில் இரண்டு ஆங்கிலேயர்கள், ஆப்பிள் பழங்களை நறுக்கிச் சாப்பிட்டுக் கொண்டு, இந்தியர்களைப் பற்றியும் அவர்களது நடையுடை பாவனைகளைப் பற்றியும் கிண்டலும் கேலியுமாகப் பேசிச் சிரித்துக் கொண்டு வந்தார்கள்.

பார்த்தார் சீனிவாச அய்யர். ரயில் கும்பகோணத்தை நெருங்குகிற சமயத்தில் தம்மிடமிருந்த முற்றிய கருணைக் கிழங்கை நன்றாகச் சீவி, சிறு சிறு துண்டுகளாக நறுக்கி ஒரு தட்டில் வைத்தார். கருணைக்கிழங்கின் ரோஸ் நிற அழகில் மயங்கிய அந்த ஆங்கிலேயர்கள், ‘‘இது என்ன பழம்? இத்தனை அழகாயிருக்கிறதே!’’ என்று கேட்க, அதற்கு சீனிவாச அய்யர், ‘‘இது இந்திய ஆப்பிள் வகையைச் சேர்ந்த பழம்; சாப்பிட்டுப் பாருங்கள் மிகவும் சுவையாக இருக்கும்!’’ என்று பதில் சொல்வதற்கும் ரயில் கும்பகோணத்தை அடைவதற்கும் சரியாக இருந்தது.

அந்த ஆங்கிலேயர்கள் கருணைக் கிழங்கைச் சாப்பிட ஆரம்பித்தனர். ரயிலை விட்டு இறங்கிச் சென்ற சீனிவாச அய்யர், ஸ்டேஷனிலிருந்த டிக்கெட் பரிசோதகர் ஒருவரிடம், தாம் பயணம் செய்த பெட்டியில் இரண்டு ஆங்கிலேயர்கள் கருணைக் கிழங்கைச் சாப்பிட்டு, அரிப்புத் தாங்காமல் கத்திக் கொண்டிருப்பதாகவும் உடனடியாக உப்பும் புளியும் எடுத்துச் சென்று அவர்களுடைய வாயில் தேய்த்துக் கொள்ளச் சொல்லுமாறும் கூறிச் சென்று விட்டார்!



Dr. J. V. G. சேகர்

# ஆஸ்துமா - ஈஸ்னோபிலியா !

## இனி கவலையே வேண்டாம்.

ஆஸ்துமா, ஈஸ்னோபிலியா போன்ற நோய்களுக்கு முக்கிய காரணமாக விளங்குவது நரம்புத் தளர்ச்சியே எனலாம். சுற்றுப்புற சூழ்நிலை, தட்பவெப்ப நிலை, உண்ணும் உணவுப் பொருள்கள் போன்ற இவைகளில் வித்தியாசம் ஏற்படும் போது, உடல் தாக்கப்பட்டு, நாளடைவில் உடலில் எதிர்ப்புச் சக்தி குறைந்து, நரம்புகள் பலமிழந்து நரம்புத் தளர்ச்சியை உண்டாக்குகின்றன.

கழிவு நீரையும், அசுத்தக் காற்றையும் முறையே உடலிலிருந்து பிரித்து வெளியேற்றும் சிறுநீரகங்கள், நுரையீரல்கள் போன்ற உறுப்புகள், நரம்புத் தளர்ச்சியினால் சரிவர வேலை செய்ய முடியாமல் போவதால், இரத்தத்தில் ஈஸ்னோபிலியா என்பவை அதிகரிக்கப்பட்டு கபம், கோழை, தும்மல், இருமல், மூக்கில் நீர் வடிதல், சளித் தொல்லை, விலாப்பகுதியில் வலி எடுத்தல் போன்றவைகள் ஏற்படுகின்றன. மற்றும் நரம்புத் தளர்ச்சியினால் இஸ்டாமின் (Histamine) என்னும் இராசயனப் பொருள் கட்டுப்பாடின்றி, தானாகவே உடலில் அதிகரிக்கப்பட்டு விடுகிறது. இதனால் ஒத்துக் கொள்ளப்படாத அலர்ஜி (Allergy) என்று உருவாகி, பின்னர் தூசுடன் கலந்த காற்றையோ, சில உணவுப் பொருள்களையோ நுகரும் போது மூச்சுத் திணறலுக்கு ஆளாகின்றோம். உண்ண முடியாமை, தூக்கமின்மை, பலஹீனம், மலத்தில் பூச்சிகள் வெளியேறுதல், தினசரி வேலையில் ஆர்வமின்மை போன்றவைகளும் இந் நோய்க்குச் சம்பந்தப்பட்டது எனலாம்.

நரம்புத் தளர்ச்சியினால் பாதிக்கப்பட்ட நுரையீரல்கள், சிறுநீரகங்கள் போன்றவைகளும் சீராக செயல்பட ஆஸ்துமா, ஈஸ்னோபிலியா குறைகள் நீர; பின்விளைவோ, பக்கவிளைவோ (side-effects) ஏற்படுத்தாத, தக்க மூலிகை மருந்தினை உட்கொள்ள வேண்டும். மற்றும் இயற்கை நல மருத்துவ முறைகளான வாழையிலை சூரியக் குளியலையும், பிராணாயாமமும் செய்து வர வேண்டும். மேலும் ஆலோசனை பெற நேரிலோ அல்லது ரூ.2-க்கான தபால்தலையை அனுப்பித் தபாலிலோ தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி :




நிறுவனர், Dr. J.V.G. சேகர், Ph.D. (மருத்துவம்) போன் : 8257059

காந்திஜி இயற்கை நலவாழ்வு நிலையம் - சர்க்கரை நோய் ஆராய்ச்சி மையம்

43/2 விஜயராகவா ரோடு, (வாணிமஹால் அருகாமையில்)

தி.நகர், சென்னை - 600 017.

(ஆலோசனை நேரம் : தினமும் காலை 10 மணி முதல் 1 மணி வரை)

அந்த ஆங்கிலேயர்கள்தான் பின் னாட்களில் 'கும்பகோணம்' என்ற வார்த் தைக்கு 'ஏமாற்றுக்காரர்கள்' என்று அர்த் தம் ஏற்படக் காரணமாகி விட்டார்கள்!

கும்பகோணம் என்ற பெயர் எப்படி ஏற்பட்டது? 1385-ஆம் ஆண்டு அக்டோபர் 25-ம் தேதியிலிருந்துதான் 'கும்பகோணம்' என்ற பெயர் ஏற்பட்டதென்று சாரங்க பாணி கோயிலிலுள்ள விருப்பண்ண உடை யாரின் கல்வெட்டு கூறுகிறது. அதற்கு முன்பு குடமூக்கு என்றும் திருக்குடந்தை என்றும்தான் அழைக்கப்பட்டு வந்தது. இதற்கும் புராண விளக்கம் இருக்கிறது.

திரேதா யுகம் முடியும் போது ஏற்படும் பிரளயத்தில் உலக ஜீவராசிகளைக் காக்கும் பொருட்டு, சிவனிடம் வேண்டிய பிரம்மா, சிருஷ்டி வித்துக்கள் அடங்கிய அமுதக் கலசமொன்றை மேரு மலையில் பூஜித்து வைத்தார். பிரளயத்தில் ஏற்பட்ட வெள்ளம் காரணமாகக் கலசம் மிதந்து சென்றது. அப்போது கலசத்திலிருந்து மாவிலை, தேங்காய், தர்ப்பை, வில்வம் ஆகியன விழுந்த இடங்கள் சிவத்தலங்க ளாயின.

கலசத்தில் எஞ்சியிருந்த அமுதத்தைச் சிவன் அம்பெய்து உடைத்த போது, அந்த அமுதம் வழிந்து தேங்கிய இடம் மகாமகக் குளமாக மாறியது. கும்பம் (கலசம்) தங்கிய ஊர் என்பதால் குடமூக்கு என்று அழைக்கப்பட்டது. பின் அதுவே மருவிக் குடந்தை என்றும் வழங்கப்படலாயிற்று. பின்னர் கும்பகோணம் என்றானது.

காவிரியின் டெல்டா பகுதியான சோழ நாடு குடம் போன்ற முக்கோண வடிவில் அமைந்துள்ளது. அதன் ஒரு நுனியில் (மூக்கில்) அமைந்த நகரமாதலால் 'குட மூக்கு' என்று அழைக்கப்படலாயிற்று என்றும் கூறுகிறார்கள்.

கும்பகோணத்துக்கான இன்னொரு சிறப்பு, சங்ககாலச் சோழர்கள் காலத்தில் இந்த நகரம் அரசாங்கக் கருவூலமாக இருந் திருக்கிறது என்பது. இச் செய்தி 'கொற்றச் சோழர் குடந்தை வைத்த நாடு தரு நிதியி னும்...' என்கிற குறுந்தொகைப் பாடலில் இருக்கிறது. அதாவது 'குடந்தையிலுள்ள கருவூலத்துக்குச் சோழ மன்னர்கள் போட்டிருக்கும் பலமான காவலைப் போல், தலைவிக்கும் காவல் போடப்பட் டுள்ளதால் அவளைச் சந்திப்பது கடினம்' என்று தலைவனுக்குத் தோழி கூறுகிற பாடல் அது!

– கோ. சீதாபதி, சிவ. சீனிவாசன், சி. சந்திரகாந்த், இடவை எழில்

# 7. தந்தியும் தபாலும்

ஸ்ரீதரன், ''வந்துட்டயா, அப்பா! வா!'' என்று சொல்லிக் கொண்டே, படுக்கையிலிருந்து எழுந்து வந்து கதவைத் திறந்தான்.

நாணா உள்ளே நுழைந்த போது, ''ஓகோ! தூக்கம் போலே இருக்கு. தூங்குடா, அப்பா, தூங்கு! அடுத்த வருஷம் இந்த நாளிலே தலைமாட்டிலே ஒரு குழந்தை, கால் மாட்டிலே ஒரு குழந்தை கிடந்து 'குவாங்' 'குவாங்' என்று கத்தும். அப்புறம் தூக்கமேது, எழவேது? எல்லாத் தூக்கத்தையும் இப்பவே தூங்கி விடு'' என்று சொல்லிக் கொண்டு வந்தான்.

''நாணா அய்யர்வாள்! தங்கள் திருவாயால் என்ன திருப் பிதற்றல் பிதற்றுகிறீர்கள்?'' என்று கேட்டான் ஸ்ரீதரன்.

''நானா பிதற்றுகிறேன்? இப்போ என்ன பந்தயம் கட்டறே? முதல் முதல்லே, உனக்கு ரெட்டைப் பிள்ளைதான் பிறக்கப் போகிறது என்கிறேன்...''

''சரி பிறக்கட்டும், அப்புறம்?''

''நானும் பார்த்தாலும் பார்த்தேன். உன்னைப் போலே அழுக்கனைப் பார்த்த தில்லைடா, ஸ்ரீதரா! கல்யாணம் நிச்சயமாச்சுன்னு சமாசாரம் வந்தால், உடனே...''

''கல்யாணமா? யாருக்கு?'' என்று கேட்டான் ஸ்ரீதரன்.

''சரியாய்ப் போச்சு! 'அட எழவே! எனக்கா கல்யாணம்?' என்றானாம் ஒருவன்! அந்த மாதிரிதான் இருக்கு கதை!''

''இருந்துட்டுப் போகட்டும்; இப்பவாவது 'வாட் இஸ் தி மாட்டர்'ன்னு' சொல்லித் தொலை.''

''என்ன?... நிஜமா, உனக்கு ஒண்ணுந் தெரியாதுன்னா சொல்றே?''

''ஆமாம், ஆமாம்; 'நாட் இல்ட்டி'ன்னு தான் அப்பவே பிடிக்கச் சொல்லிண்டிருக்கேன்.''

''இதென்ன வேடிக்கையான்னா இருக்கு? இந்தத் தந்தியைப் பாரு!'' என்று சொல்லி, நாணா தன் சட்டைப் பையிலிருந்து ஒரு தந்தியை எடுத்து ஸ்ரீதரனிடம் கொடுத்தான்.

''ஸ்ரீதரனுக்குக் கல்யாணம் நிச்சயமாகியிருக்கிறது.

அவனை உடனே அனுப்பி வைக்கவும் - ராஜாராமய்யர்.''

இந்தத் தந்தியைப் படித்தவுடனே, ஸ்ரீதரனுக்கு ஒரு கணநேரம், ஏதோ ஒருவித இன்ப உணர்ச்சி உண்டாவது போல் இருந்

> ''அந்தப் பொண்ணுக்குக் கண் ஒரு மாதிரி. ஒண்ணரைக் கண்ணுன்னு யாராவது சொன்னா, நம்பாதே, ஸ்ரீதரா! அப்படியெல்லாம் ஒன்றுமில்லை.'' நாணா சொன்னதெல்லாம் ஸ்ரீதரனுக்கு வேம்பாயிருந்தது.



தது. ஆனால் அடுத்த நிமிஷத்தில் ஆத்திரம் பொங்கிக் கொண்டு வந்தது. ''எனக்குக் கல்யாணம் நிச்சயம். ஆனால் என்னை ஒரு வார்த்தை கேட்கவில்லை! சபாஷ்!'' என்று மனத்திற்குள் சொல்லிக் கொண்டான். 'தந்தி கூட எனக்கு இல்லை! - நாணாவுக்கு!' என்று எண்ணிய போது, அவனுடைய கோபம் அசாத்தியமாயிற்று. ஆனால், உடனே, சற்று முன்னால் தான் மனோராஜ்யத்தில் ஈடுபட்டிருந்த போது தபால்காரன் வந்து, ''ஸார்! தபால்!'' என்றதும், தான் அலட்சியமாக, ''போட்டு விட்டுப் போ!'' என்று சொன்னதும் ஞாபகம் வரவே, திடுக்கிட்டு எழுந்து ஜன்னலண்டை சென்று, அங்கே தரையில் கிடந்த கடிதத்தை எடுத்தான். அதில் நாலு மூலையிலும் மஞ்சள் தடவியிருந்தது.

இதையெல்லாம் பார்த்துக் கொண்டிருந்த நாணா, ''ஏண்டா, உலக்கை! கல்யாணக் கடுதாசைக் கூடப் பிரிக்கப் பார்க்காமலா தூங்கிண்டிருந்தாய்!'' என்றான்.

ஸ்ரீதரன் நாணாவைச் சிறிதும் பொருட்படுத்தாமல் பரபரப்புடன் உறையை உடைத்து, உள்ளிருந்த கடிதத்தைப் பார்த்தான். அவனுடைய தகப்பனார் ராஜாராமய்யரின் கடிதந்தான். கடிதம் எழுதியிருந்த தோரணையில் அவர் தம்பேரில் அதிகமாகப் பொறுப்பைச் சுமத்திக் கொள்ள இஷ்டப்படவில்லையென்பது தெளிவாயிருந்தது.

# தியாக பூமி

## அமரர் கல்கி



''இந்த வருஷம் எப்படியும் உனக்குக் கல்யாணம் செய்து விட வேண்டுமென்பது உன் தாயாரின் விருப்பம். இனிமேல் தாமதிப்பது உசிதமில்லையென்பதுதான் என் அபிப்பிராயமும். ஆகவே, கூடியவரையில் எல்லாவற்றிலும் சிலாக்கியமாகத் தோன்றிய இடத்தில் கல்யாணம் நிச்சயம் செய்திருக்கிறோம். நாலாயிரம் ரூபாய் வரதட்சிணை பேசி ஆயிரம் ரூபாய் அட்வான்ஸ்* வாங்கியாகி விட்டது...''

இதைப் படித்ததும் ஸ்ரீதரனுக்குத் தலையில் போட்டுக் கொள்ளலாமென்று தோன்றியது. அப்பாவுக்குக் கூடவா புத்தி இப்படிப் போக வேண்டும்?

மேலே, ராஜாராமய்யர், எவ்வளவு ரூபாய்க்குப் பித்தளைப் பாத்திரம் வெள்ளிப் பாத்திரம் வாங்கி வைக்கிறார்கள், பெண்ணுக்கு நகை என்னென்ன போடுகிறார்கள், மாப்பிள்ளைக்கு உடுப்புக்கு எவ்வளவு ரூபாய் கொடுக்கிறார்கள், மேற்கொண்டு என்னென்ன செய்வதாகச் சொல்லியிருக்கிறார்கள் என்பதையெல்லாம் விவரமாக எழுதியிருந்தார். கடைசியில், ''இந்த விவரமெல்லாம் உனக்கு அவசியம் எழுத வேண்டுமென்று உன் தாயார்

மசானவதன் பேரில் எழுதியிருக்கிறேன். அம்மா போய்ப் பெண்ணைப் பார்த்து விட்டு வந்தாள். மனஸுக்கு ரொம்பவும் பிடித்திருப்பதாகச் சொல்கிறாள். நீ நாளை இராத்திரி வண்டியிலேயே புறப்பட்டு வந்து சேர வேண்டியது'' என்று கடிதத்தை முடித்துக் கையெழுத்துப் போட்டிருந்தார்.

'அம்மாவுக்கு மனஸுக்குப் பிடிச்சிருக்காம்! பலே! அம்மாதான் கல்யாணம் பண்ணிக்கப் போறாளாக்கும்!' என்று ஸ்ரீதரன் மனத்துக்குள் எரிந்து விழுந்தான். அந்த எரிச்சல், கடிதத்தின் பின் குறிப்பாக எழுதியிருந்ததைப் படித்ததும் பல மடங்கு அதிகமாயிற்று.

''பெண்ணின் பெயர் சாவித்திரி...''

(நல்ல கர்நாடகப் பெயர்! தன் பெயரும் சத்தியவான் என்றிருந்தால், இரண்டு பேரும் நாடகமே ஆடி விடலாம் என்று ஸ்ரீதரன் எண்ணினான்.)



''சே! வரவர உங்களுக்கு ஞாபக மறதி அதிகமாயிடுச்சு.''

''எத வெச்சுச் சொல்றே?''

''கீழே குனிஞ்சு காலைப் பாருங்க. நீங்க போட்டுக் கொண்டு போன பழைய செருப்பையே கல்யாண மண்டபத்திலிருந்து வரும் போதும் போட்டுக்கிட்டு வந்திருக்கிறீங்களே!''

- கே.என்.கே. ஆறுமுகம்.

''...தகப்பனாரின் பெயர் சம்பு சாஸ்திரி. அவர்களுக்குப் புதுச்சத்திரம் ஸ்டேஷனுக்கு அருகிலுள்ள நெடுங்கரைக் கிராமம். பரம்பரையான வைதிகக் குடும்பம். குலங் கோத்திரத்தில் அப்பழுக்குக் கிடையாது. இதையும் உன் தாயார் எழுதச் சொன்னாள்.''

ஸ்ரீதரனுக்கு அழுகையே வந்து விடும் போல் இருந்தது. பேஷ்! நல்ல இடம் பார்த்தார்கள்! போயும் போயும் கடைசியில் ஒரு பட்டிக்காட்டு சாஸ்திரி பெண்தானா கிடைத்தது? இந்தத் தடியன் நாணாவுக்கு, பிராம்மணார்த்த சாஸ்திரியின் பிள்ளைக்கு, பெரிய வக்கீல் வீட்டிலே கல்யாணம்; தனக்குப் பட்டிக்காட்டுச் சாஸ்திரி வீட்டில் கல்யாணம். பரம்பரை வைதிகமாம்! சிவ சிவா! அப்பம் வடையிலேயே முழுகியவர் போல் இருக்கு!

கடிதத்தைக் கோபமாகத் தரையில் விட்டெறிந்தான் ஸ்ரீதரன். அவன் அதைப் படித்துக் கொண்டிருந்த போது, சார்லஸ் கார்வியின் நாவலைப் புரட்டிக் கொண்டிருந்த நாணா திடுக்கிட்டு, ''என்னடா இது கோபம்?'' என்று கேட்டு விட்டு அந்தக் கடிதத்தை எடுத்துப் படிக்கத் தொடங்கினான்.

நாலாயிரம் ரூபாய் வரதட்சிணை என்ற விஷயத்தைப் படித்ததும், நாணா, ''பலே! அடிச்சேடா பிரைஸ், நாலாயிரம் ரூபாய்!'' என்று ஸ்ரீதரனின் முதுகில் தட்டிக் கொடுத்தான். பாவம்! நாணாவின் கல்யாணத்தில் வரதட்சிணை கிடையாது. லா காலேஜில் சேர்த்துப் படிக்க வைப்பதாக அவனுடைய மாமனார் ஒப்புக் கொண்டு, பணம் கொடுக்காமலே காரியத்தை முடித்து விட்டார். இப்போது அவன் மாமனார் வீட்டிலிருந்துதான் லா காலேஜில் படித்துக் கொண்டிருந்தான். டிராம் சத்தத்துக்கு இரண்டணா வேணுமென்றாலும் மாமனாரைத்தான் அவன் கேட்க வேண்டியதாயிருந்தது. ஆகவே, நாலாயிரம் ரூபாய் வரதட்சிணை என்றதும், அவனுக்கு ஸ்ரீதரன் மேல் பொறாமை உண்டாயிற்று. இந்தப் பொறாமை, பின்னால், ''சம்பு சாஸ்திரியின் பெண்'' என்று படித்ததும் குதூகலமாக மாறியது.

''சபாஷ்! நெடுங்கரை சம்பு சாஸ்திரி பெண்ணா? ஹா! ஹா! ஹா!'' என்று நாணா விழுந்து விழுந்து சிரிக்கத் தொடங்கினான்.

ஸ்ரீதரன் தன்னுடைய எரிச்சலையெல்லாம் அடக்கிக் கொண்டு, ''ஏன்? அவாளையெல்லாம் உனக்குத் தெரியுமா என்ன?'' என்று கேட்டான்.

''பேஷாய்த் தெரியும். நெடுங்கரை சம்பு சாஸ்திரின்னா தஞ்சாவூர் ஜில்லா பூராத் தெரியுமே? நீ கல்கத்தாவில் இருந்தவன்; உனக்குத் தெரியாது. மடிசஞ்சின்னா, ஒண்ணாம் நம்பர் மடிசஞ்சி. போறாத்துக்கு, பஜனை வேறே. 'பாண்டுரங்க விட்டலே' என்று நாமாவளி சொல்லிக் கொண்டு குதிக்க ஆரம்பித்தாரானால் ஊர் கிடுகிடுத்துப் போயிடும். ஆத்திலே, அம்பாள் உபாசனை! நவராத்திரி ஒன்பது நாளும் பூஜை பிரமாதப்படும்; அதை ஏன் கேட்கிறே, போ!''

ஸ்ரீதரனுக்கு வெட்கம் பிடுங்கித் தின்றது. இருந்தாலும் சமாளித்துக் கொண்டு, ''நல்லவேளை! நீ ஆத்திலே ஆம்படையாள் உபாசனை பண்றயே அந்த மாதிரி இல்லையே? நிஜமா, சக்தி உபாசனைதானே பண்றார்? இருக்கட்டும்; அவர் பெண்ணைக் கூட நீ பார்த்திருக்கயா, என்ன?'' என்றான்.

நாணா திடீரென்று ஆச்சரியம் அடைந்தவனைப் போல், ''ஏண்டா, நிஜமா நீ பொண்ணைப் பார்க்கலை? நீ பார்க்காமலேயா கல்யாணம் நிச்சயம் பண்ணியாச்சு!

சரிதான், இப்பத்தான் விஷயம் தெரிந்தது. ஸ்ரீதரா! உன் அப்பாவும் அம்மாவுமாச் சேர்ந்து உன்னை நாலாயிரம் ரூபாய்க்கு வித்துட்டா! அவ்வளவுதான்'' என்றான்.

''என்னை வித்துடறது அவ்வளவு இலேசில்லை. அது இருக்கட்டும். நீ பொண்ணைப் பார்த்திருக்கிறாயா, சொல்லு!''

''நன்னாப் பார்த்திருக்கேன். ஆனால் பார்த்து இரண்டு வருஷம் ஆச்சு. நான் பார்த்தபோது ஓர் அழுக்குப் பாவாடையைக் கட்டிண்டு மூக்கைச் சிந்திண்டு நின்னுது. ஆனால், நிஜத்தைச் சொல்லணுமோல்யோ? அந்தப் பொண்ணுக்குக் கண் ஒரு மாதிரி. ஒண்ணரைக் கண்ணுன்னு யாராவது சொன்னா, நம்பாதே, ஸ்ரீதரா! அப்படியெல்லாம் ஒன்றுமில்லை.''

நாணா சொன்னதெல்லாம் ஸ்ரீதரனுக்கு வேம்பாயிருந்தது. ஆனாலும் துணிந்து, கடைசிக் கேள்வியையும் கேட்டு விட்டான். ''அந்த ஊரிலே பள்ளிக்கூடம் என்கிற நாம தேயம் கிடையாதே?'' என்றான்.

''ஏன் கிடையாது? பொண்ணு படிச்ச பொண்ணான்னு தானே கேக்கறே? இரண்டாங் கிளாஸ் வரையிலும் படிச்சிருக்கா. ப-ட-ம் படம், கு-ட-ம் குடம் என்றெல்லாம் எழுத்துக் கூட்டிப் படிப்பாள். ஆனால், ஸ்ரீதரா! நான் சொல்றேன், கேளு. படிப்பாவது நாகரிகமாவது! படிப்பையும் நாகரிகத்தையும் நான் கட்டிண்டு அவஸ்தைப்படறது போதும். எங்கேயாவது ஐந்து நிமிஷம் வெளியிலே போனால், வீட்டிலே உத்தரவு கேட்டுண்டு போக வேண்டியிருக்கு. இரண்டு நிமிஷம் தாமதமாய்ப் போனா, ஏன் 'லேட்' என்ற கேள்வி. இந்த வம்பெல்லாம் உனக்கு வேண்டாம். பேசாமல், உன் அப்பா அம்மா நிர்மாணிச்சிருக்கிற பொண்ணையே பண்ணிக்கோ - சரி; நான் வரட்டுமா? இன்றைக்கு ஸினிமாவுக்கு அழைச்சிண்டு போறதாச் சொல்லியிருக்கேன். உடனே போகாட்டா, ஸுலோசனா என்னை உசிரோட வைக்க மாட்டாள்.''

''நாணா! போகிற வழியிலே, தந்தி ஆபீஸிலே, 'ஸ்ரீதரன் செத்துப் போய் விட்டான்; அவனுக்குக் கல்யாணம் வேண்டாம்' என்று எங்க அப்பாவுக்குத் தந்தி கொடுத்துட்டுப் போய் விடு.''

''சீச்சீ! என்னடா உளறுகிறே! சம்பு சாஸ்திரியைப் பற்றி நான் என்னமோ சொன்னேனே என்று, நினைக்காதே. அப்படி ஒண்ணும் ரொம்ப மட்டமில்லை! நெடுங்கரையில் அவர்தான் பெரிய மிராசுதார். பொண்ணும் அப்படி அவலட்சணமா இருக்க மாட்டா. ராத்திரியே ஊருக்குக் கிளம்பிப் போ. வேணும்னா, பொண்ணை நேரிலே பார்த்துட்டுத்தான் கல்யாணம் பண்



''அரசருக்கு ரொம்ப பண நெருக்கடி போல....''

''எப்படிச் சொல்கிறீர்கள்?''

''பாத்திரக்காரனுக்கு ஆராய்ச்சி மணியை விலை பேசிக் கொண்டு இருக்கிறார்!''

– கே. வி.

ணிக்குவேன்னு சொல்லு. தெரிகிறதா?''

''பேஷாய்த் தெரிகிறது.''

''ஊருக்குப் போனதும் கடுதாசி போடு! ஏண்டா! கல்யாணத்துக்கு நான் வரணுமா, வேண்டாமா?''

''கல்யாணம் நடந்தால் கட்டாயம் வரணும். பருப்பில்லாமல் கல்யாணமா?''

''நடந்தால் என்ன? கட்டாயம் நடக்கத்தான் போறது. நானும் பார்க்கத்தான் போறேன். உன் அம்மா பேச்சை மீறி நீ ஒரு காரியம் செய்துட்டா, நான் ஒத்தைக் காலால் நிற்க மாட்டேனா?...''

இப்படிச் சொல்லிக் கொண்டே நாணா வெளியேறினான்.

அத்தனை நேரமும் அடக்கி வைத்திருந்த ஆத்திரம், கோபம் எல்லாம் ஸ்ரீதரனுக்கு அப்போது பொத்துக் கொண்டு வந்தது. காகிதமும் பேனாவும் எடுத்துக் கொண்டு அப்பாவுக்கு வெகு காரமாகக் கடிதம் எழுதத் தொடங்கினான்.

## 8. தங்கம்மாள்

''உன் அம்மா பேச்சை மீறி உன்னால் ஒரு காரியம் செய்ய முடியுமா?'' என்று நாணா கடைசியாகக் கேட்டு விட்டுப் போனதில் ரொம்பவும் உண்மை அடங்கி யிருந்தது.

உலக சரித்திரத்தில் பிரசித்தி பெற்ற வீரர்கள், மகான்கள் முதலியோரைப் பற்றி, ''அவர்கள் அன்னையிடம் அபார பக்தியுள்ளவர்கள்; தாய் சொல்லை மீறாதவர்கள்'' என்றெல்லாம் நாம் படித்திருக்கிறோமல்லவா? நம்முடைய ஸ்ரீதரன் ஒரு பெரிய வீரனாகவோ, மகா புருஷனாகவோ ஆவான் என்பதற்கு எவ்வித அறிகுறியும் காணப்படவில்லை என்றாலும், அவனுக்கும் மேற்கூறிய வீரர்கள் - மகா புருஷர்களுக்கும் இந்த விஷயத்தில் ஒற்றுமை இருந்தது. அவனுடைய தாயார் தங்கம்

மாளின் பேச்சை மீறி அவனால் ஒன்றும் செய்ய முடிவதேயில்லை.

ஆனால் அவனுடைய இந்த இயல்பு வெளியிலிருந்து பார்ப்பவர்களுக்குச் சாதாரணமாகத் தெரியாது. தாயாருக்கும் பிள்ளைக்கும் ஒற்றுமையே இல்லை என்றுதான் தோன்றும். அப்படி ஓயாமல் அவர்கள் சண்டை போடுவார்கள். தங்கம்மாள் எது சொன்னாலும் ஸ்ரீதரன் முதலில் அதை மறுத்துத்தான் பேசுவான். ''முடியவே முடியாது'' என்பான். எரிந்து விழுவான். திட்டுவான். ''கழுதை!'' ''மூடம்!'' ''இடியட்!'' ''பிரம்மஹத்தி!'' என்றெல்லாம் அஷ்டோத்தர அர்ச்சனை செய்வான். சில சமயம், கோபம் தலைக்கு மீறிப் போகும் போது, அம்மாவை அடித்துக் கூட இருக்கிறான்.

ஆனால், இவ்வளவு ஆர்ப்பாட்டங்களுக்கும் பிறகு, கடைசியில், தங்கம்மாள்தான் வெற்றி பெறுவாள். அவள் சொன்னபடிதான் ஸ்ரீதரன் காரியம் செய்வான்.

இத்தகைய சக்தி தங்கம்மாளுக்கு எப்படி ஏற்பட்டது என்று கேட்டால், ஏன், தாயின் அன்புதான் முதன்மையான காரணம் என்பதில் சந்தேகமில்லை; அடுத்தபடியாக, அவளுடைய மனோபலத்தையும் சொல்ல வேண்டும். வசவு திட்டு எல்லாவற்றையும் - அடிகளையும் கூட பொறுத்துக் கொண்டு, கடைசியில் காரியத்தை மட்டும் சாதித்துக் கொள்வாள்.

ஸ்ரீதரன் தங்கம்மாளின் ஒரே பிள்ளை; கடைசிக் குழந்தை. அவனுக்கு முன்னால் மூன்று பெண்கள். அவர்களில் மூத்தவளை நரசிங்கபுரத்திலேயே உறவில் கல்யாணம் செய்து கொடுத்திருந்தது. மற்ற இரண்டு பெண்களின் புருஷர்களும் உத்தியோகஸ்தர்கள். அவர்கள் ஹைதராபாத்திலும், நாகபுரியிலும் இருந்தார்கள். இப்படித் தூர தூரமான இடங்களில் இருந்தும் மூன்று பெண்களின் புக்ககத்தாரும் ஒரு விஷயத்தில் பூரண ஒற்றுமைப்பட்டிருந்தார்கள். ராஜாராமய்யரையும் தங்கம்மாளையும் அவர்கள் படுத்தி வைத்த பாட்டுக்கு அளவேயில்லை. ஒருவரோடு ஒருவர் போட்டி போட்டுக் கொண்டு, ''அந்தப் பெண்ணுக்கு மட்டும் அதைச் செய்தாயே? ஏன் எங்க மாட்டுப் பெண்ணுக்கு மட்டும் செய்யவில்லை?'' என்றெல்லாம் பலமான சண்டை பிடிப்பார்கள். ராஜாராமய்யர் சம்பாதித்ததெல்லாம், இந்த மூன்று பெண்களுக்குக் கல்யாணம் செய்து கொடுத்ததற்கும், பிறகு அவர்களுக்குச் சீர் செனத்தி செய்ததற்குமே சரியாய்ப் போய் விட்டது என்று சொல்லலாம். அவர்களுடைய இரண்டாவது பெண் ஐந்து குழந்தைகளைப் பெற்ற பிறகு, ஆறாவது பிரசவத்துக்குக் கூடப் பிறந்தகத்துக்குத்தான் வருவாள் என்றால், பார்த்துக் கொள்ளுங்களேன்!

இந்தப் பெண்களும், இவர்களுடைய புருஷர்களும், சம்பந்திகளும் கொடுத்து வந்த தொல்லைகளினாலேயே ராஜாராமய்யர் ஒரு மாதிரி கால் பைத்தியமாகி விட்டார் என்று சொல்ல வேண்டும். அவருக்கு வாழ்க்கையிலேயே வெறுப்பு வந்து விட்டது. குடும்ப விவகாரங்களையெல்லாம் தங்கம்மாளே பார்த்துக் கொள்ளட்டும் என்று விட்டு விட்டார். தாம் மனோதத்துவ பரிசோதனைகளிலும், ஆவி உலக ஆராய்ச்சிகளிலும் ஈடுபடத் தொடங்கினார். அந்தக் காலத்தில், ''மெஸ்மெரிஸம்'', ''ஹிப்னாடிஸம்'', ''டெலிபதி'' முதலிய மனோதத்துவ ஆராய்ச்சிகளைப் பற்றிய புஸ்தகங்கள் ஏராளமாக வெளியாகிக் கொண்டிருந்தன. இன்னும், மரணத்திற்குப் பிறகு மனுஷர்கள் என்ன ஆகிறார்கள் என்பது பற்றியும், ஆவிகளுடன் பேசும் ஆச்சரிய அநுபவங்களைப் பற்றியும் சொல்லும் புஸ்தகங்கள் பிரபலமாயிருந்தன. ராஜாராமய்யர் இத்தகைய நூலாராய்ச்சியில் தம்முடைய முழுக் கவனத்தையும் செலுத்தினார். இதற்காகவே அவர், தமது உத்தியோகக் காலம் முடிவடைவதற்கு இரண்டு வருஷம் முன்னதாகவே வேலையை விட்டு விலகி நரசிங்கபுரத்துக்கு வந்து சேர்ந்தார்.

ராஜாராமய்யர் இம்மாதிரி 'தாமரை இலைத் தண்ணீர்' என்னும் வாழ்க்கைத் தத்துவத்தைக் கடைப்பிடித்து வந்தபடியால், குடும்ப நிர்வாகம் பெரிதும் தங்கம்மாளின் தலையிலேயே சுமந்தது. மூன்று சம்பந்தி வீட்டுக்காரர்களோடும் மல்லுக்கு நின்று சமாளிக்க வேண்டிய பொறுப்பு முழுவதும் அவளுக்கே ஏற்பட்டது. தங்கம்மாள் எவ்வளவுதான் முதலில் பிடிவாதம் பிடித்தாலும், கடைசியில், பெண்கள் கண்ணைக் கசக்கிக் கொண்டு நிற்பார்களே என்ற எண்ணத்தினால், சம்பந்தி வீட்டுக்காரர்களுக்கே விட்டுக் கொடுக்க வேண்டி நேரிடும். அப்போதெல்லாம், அவள் தன் மனத் திற்குள், ''ஆகட்டும். ஆகட்டும். ஸ்ரீதரனுக்குக் கல்யாணம் ஆகட்டும்; இவ்வளவுக்கிவ் வளவு ஆட்டி வைக்காமல் போனால்...'' என்று கர்வங் கட்டிக் கொள்வாள்.

சென்ற இரண்டு மூன்று வருஷமாக, ஸ்ரீதரனுக்கு 'நல்ல' இடத்தில் கல்யாணம் ஆக வேண்டுமே என்ற ஒரே கவலைதான் தங்கம்மாளுக்கு. 'நல்ல' இடம் என்றால், தான் 'ஆட்டி வைப்ப'தற்குத் தகுந்த இடம் என்று அர்த்தம். பட்டணங்களில், எங்கேயாவது வக்கீல் பெண், இக்கில் பெண் வந்து வாய்த்து விடப் போகிறதேயென்று தங்கம்மாளுக்கு ஒரே பயம். அந்த மாதிரி இடத்தில் சம்பந்தம் அவளுக்குப் பிடிக்கவில்லை; இரண்டு கோண எழுத்துப் படித்துவிட்டு, 'ஹாட் பூட்' என்று இங்கிலீஷ் பேசிக் கொண்டு, தலையைக் கோண

வகிடு பிளந்து கொண்டு நிற்கும் பெண்களையும் அவளுக்குப் பிடிக்கவில்லை. இடம் பணக்கார இடமாயிருக்க வேண்டும். பெண் பதவிசாயிருக்க வேண்டும் என்பது தான் அவளுடைய விருப்பம். இந்த நோக்கத்துடனேதான், ராஜாராமய்யர் கிராமாந்தரத்துக்குப் போகலாம் என்று சொன்ன யோசனையை அவள் ஒப்புக் கொண்டது; கிராமாந்தரத்தில், அதுவும் 'நம்ம' பக்கத்தில் பெரிய மிராசுதார் பெண்ணாகப் பார்த்துக் கல்யாணம் செய்ய வேண்டும். அப்போதுதான் பெண்ணும் குடித்தனத்தில் தனக்கு ஒத்தாசையாயிருக்கும். சம்பந்திகளும் தன்னுடைய அதிகாரத்துக்கு உட்படுவார்கள் என்று தங்கம்மாள் தன் மனத்திற்குள் தீர்க்காலோசனை செய்து தீர்மானித்திருந்தாள்.

இந்த நோக்கத்துக்கெல்லாம் சம்பு சாஸ்திரி வீட்டில் சம்பந்தம் ஒத்து வருவதாயிருந்தது. பெண்ணுக்குச் சொந்தத் தாயார் இல்லை; இளைய தாயார் என்பது ஒரு குறைவு. ஆனால் அதுவும் ஒரு நல்லது தான். பெண்ணுக்கு அம்மா சலுகை இராது. வீட்டில் நாய் மாதிரி படித்து கிடக்கும். சம்பு சாஸ்திரிக்கு வேறு பெண்ணோ, பிள்ளையோ கிடையாது என்பதும் ஒரு முக்கியமான 'பாயிண்ட்' அல்லவா? அவருக்குப் பிறகு, அந்தச் சொத்தெல்லாம் பெண்ணுக்குத்தானே வந்து சேரும்?

இது எல்லாவற்றையும் யோசித்துத் தங்கம்மாள், இந்தப் பெண்தான் தனக்கு மாட்டுப் பெண்ணாக வர வேண்டுமென்று முடிவு செய்து விட்டாள். அவள் முடிவு செய்த பிறகு, ஸ்ரீதரன் 'வேண்டாம்' என்று சொன்னால் அதற்காகக் கல்யாணம் நின்று போய் விடுமா? அவனுடைய கடுதாசை ராஜாராமய்யர் அவளுக்கு வாசித்துக் காண்பித்து, "இப்போது என்னடி சொல்றே? உன் பேச்சைக் கேட்டுப் பணம் வேறே வாங்கி யாச்சே! உன் பிள்ளையானா இப்படிச் சொல்றானே?" என்றதும், தங்கம்மாள், "நன்னாயிருக்கு; அவன் அப்படித்தான் சொல்லுவான். பின்னே, இந்தக் காலத்துப் பிள்ளைகளைப் போலே, கல்யாணம் என்றதும், பல்லை இளிப்பன் என்று நினைச் சுண்டயளோ? ராத்திரி போட் மெயிலிலே பட்டணத்துக்குக் கிளம்பிப் போகலாம், வாருங்கோ. இரண்டு பேருமாய்ப் போய் அவனையும் அழைச்சுண்டு, இன்னும் துணிமணி நகை நட்டு வாங்க வேண்டியதையும் வாங்கிண்டு வந்து விடலாம்" என்றாள்.

அந்தச் சமயத்தில், வீட்டு வாசலில் காலடிச் சப்தமும், கனைப்புச் சப்தமும் கேட்டன. "ஐயர்வாள் இருக்காளா?" என்று கேட்டுக் கொண்டே நெடுங்கரை சங்கர தீக்ஷிதர் உள்ளே வந்தார்.

(தொடரும்)

# கலை வளர்க்கும் கும்பகோணம்!



கும்பகோணம் பக்தியை மட்டும் வளர்க்கும் நகர மல்ல; நமது பாரம்பரியக் கலை ஞானத்தை உலகுக்கே பறை சாற்றும் நகரம்!



❖ தேவசேனாபதி ஸ்தபதி : பாரம்பரிய வழியில்...



❖ வித்யாசங்கர் ஸ்தபதி : நவீனத்துக்குப் பாரம்பரிய விளக்கம்!

தாராசுரம் ஐராவதேஸ்வரர் கோயிலுக்குச் சென்று வராத எந்தவொரு பரதநாட்டியக் கலைஞரும் நாட்டியத்தில் முழுமையடைவதில்லை என்று அடித்துச் சொல்லலாம். ஆமாம்! அங்கு, சாதாரண பக்தர்களுக்கு ஆண்டவன் லிங்க வடிவில் காட்சி தந்து அருள்பாலிக்கிறார் என்றால், நாட்டியக் கலைஞர்களுக்குச் சிற்ப வடிவில் காட்சி தந்து அருள்பாலிக்கிறார் என்பது நிஜமான உண்மை!

அடேயப்பா! கோயிலின் வெளிப் பிராகாரத்தைச் சுற்றிலும்தான் எத்தனைவிதமான அடவுகளைக் காட்டும் நாட்டியச் சிற்பங்கள்! பரதநாட்டியம் மட்டும்தானா? புராண நிகழ்ச்சிகளைச் சித்திரிக்கும் சிற்பங்களும் நூற்றுக்கணக்கில் இருக்கின்றன. சுருக்கமாகச் சொன்னால் அந்தக் கோயிலைக் கட்டப் பயன்படுத்தியிருக்கும் ஒவ்வொரு கல்லையும் கலையின் ஒவ்வொரு பரிமாணமாகச் செதுக்கியிருக்கிறார்கள்!

இந்தக் கோயிலை நிர்மாணித்த இரண்டாம் ராஜராஜன், இசைதான் இறைவழிபாட்டின் ஆரம்பம் என்று உணர்ந்திருக்க வேண்டும். அதனால்தான், கோயில் கொடிமர மேடையைக் கூட வெறுமனே அமைக்கவில்லை அவன். அந்தக் கல் மேடையைக் கீழிலிருந்து மேலாகவோ அல்லது மேலிருந்து கீழாகவோ தட்டுகிற போது, ஏழு ஸ்வரங்களையும் உள்ளடக்கிய வெவ்வேறு சப்தங்கள்!

''இவை மாத்திரமல்ல; இங்குள்ள சில சிற்பங்கள் விளக்கும் சில புராண - இதிகாசக் கதைகள், தங்கள் பைபிள் கதைகளோடு ஒத்திருப்பதைப் பார்த்து வெளிநாட்டவர்கள் ஆச்சரியப்பட்டுப் போகிறார்கள்!'' என்கிறார் இங்கு கைடாகப் பணிபுரியும் பிச்சை.

''தாராசுரம் மாதிரியான கலைக் கோயில்கள்தான் என்போன்ற பாரம்பரிய ஸ்தபதிகளுக்கான கலைப் பொக்கிஷங்கள்!'' என்கிறார் தேவசேனாபதி ஸ்தபதி. ''நமது பாரம்பரிய வழியிலான சிற்பங்கள்தான் கால காலத்துக்கும் நிலைத்து நிற்கும் வல்லமை படைத்தவை. நவீன பாணியிலானவற்றுக்கு அத்தனை வலிமை இருக்குமா என்பது சந்தேகம்தான்!'' என்பது இவர் கருத்து.

ஆனால், வித்யாசங்கர் ஸ்தபதிக்கு இது போன்ற சந்தேகங்களே கிடையாது. ''பாரம்பரியத்தைப் பாதுகாத்து வருவது மட்டுமே எப்படிக் கலையின் வளர்ச்சியாகும்?'' என்று சற்று ஆவேசமாகவே கேட்கிறார்.

''நவீன பாணி என்பது, ஏதோ தான்தோன்றித்தனமான விஷயம் என்று சிலர் நினைப்பது ஆச்சரியமாக இருக்கிறது! பாரம்பரிய வழியை அஸ்திவாரமாகவும் ஆதாரமாகவும் கொண்டு, வளர்ந்து வரும் கலையின் இன்னொரு பரிமாணம்தான் நவீன பாணிச் சிற்பங்கள். சுருக்கமாகச் சொன்னால், பாரம்பரிய வழிகளின் வளர்ச்சி நிலைதான் நவீன பாணி!'' என்று சொல்லும் வித்யாசங்கர், தமது நவீன பாணிச் சிற்பங்களுக்குப் பாரம்பரிய விளக்கமும் தருகிறார்.

சிற்பக் கலை ஒருபுறமென்றால், மறுபுறம் ஓவியக் கலை. கும்பகோணத்திலிருந்து கூப்பிடு தூரத்திலுள்ள தாராசுரம் கோயில் பன்னிரண்டாம் நூற்றாண்டில் கட்டப்பட்ட பிறகு, பதினேழாம் நூற்றாண்டில் வந்த நாயக்கர்கள், கலைத் தாய்க்குத் தங்களுடைய பங்களிப்பாக அக் கோயிலில் ஓவியங்களை வரைந்தார்கள். நகருக்குள் இருக்கும் இராமசாமி கோயில் உள் பிராகாரத்தில் வரையப்பட்டிருக்கும் இராமாயணக் காட்சி ஓவியங்களை நாள் முழுக்கப் பார்த்துக் கொண்டிருக்கலாம்.

இந்தக் கலைப் பாரம்பரியத்தின் தொடர்ச்சி போல ஓவிய - சிற்பக் கல்லூரி. நமது பாரம்பரியக் கலை நுணுக்கங்களை உலகத்துக்கே எடுத்துக்காட்டிக் கொண்டிருக்கும் புகழ்பெற்ற ஸ்தபதிகள். இத்தனை ஏன்? கும்பகோணம் ரயில்வே ஸ்டேஷனில் கூட கர்நாடக இசையைத் தான் ஒலிபரப்புச் செய்கிறார்கள்!

ஆக, ஜகன்னாத ஸ்தபதி சொல்வது போல், ''கும்பகோணம் என்பது பிரம்மாவால் மிகவும் கவனமாகப் படைக்கப்பட்ட கலை நகரம்!''தான் என்பதில் ஐயமேயில்லை!

– வினோதானந்த், பிரசன்னகுமார்,
கவீட்ரவி, தேவாதிராஜன்

மேலட்டை (இராமாயணச் சித்திரங்கள்) வண்ணப்படம் :
ஜி. கிருஷ்ணமூர்த்தி

நடுப்பக்க வண்ணப்படங்களும் கும்பகோணம் தொடர்பான படங்களும் : கோபிநாத்

**கை** கால் சேறு கழுவி சோற்றுப் போசியை எடுத்து வைத்த போது, உயிரே போசியில் இருக்கிற மாதிரி உணர்ந்தாள் பூவாத்தாள். நைந்து புளிப்பு ஏறி நுரைத் திருக்கும் நாலு கவளம் சோறும் நாலு வெங் காயமும் போசி நிறைய நீசத் தண்ணீரும்... இதைச் சாப்பிடத்தான் அல்லது குடிக்கத் தான் இத்தனை பாடும் பரப்பும்...

போசியில் கையை விட்டுத் துழாவி இரண்டு மடக்கு நீராகாரம் குடித்த போது, இதுவரை பட்ட பாடும், களைப்பும் நீங்கி, போய்க் கொண்டிருந்த உயிர் மீண்ட மாதிரி உணர்வு ஏற்பட்டது பூவாத்தாளுக்கு.

ஏனோ அந்த சோறு உள்ளுக்குள் இறங்கிய போது, என்றுமில் லாமல் களக்கென்று கண்ணில் நீர் படிந்தது. நீர் மங்கிய கண்களுடன் எதிரே இருந்த வயல் காட்டைப் பார்த்தாள். புரியாத ஒரு துக்கம் நெஞ்சை அடைத்தது.

அவள் அப்பன், ஆத்தா, பாட்டன், பாட்டி இன்னும் எத்தனையோ சொந்தங் கள். எல்லோரும் பிறந்த, அறுப்பு வேலை செய்த பூமி இது. அவர்களை மாதிரி இந்த பூமியும் மாறவேயில்லை. இந்த பூமி தருகிற மாதிரி பூவாத்தாவும் தன் சக்திக்குண்டான உழைப்பைத் தந்திருக்கிறாள். இந்த பூமி விளைவிப்பது அதற்குச் சொந்தமில்லை. அதே மாதிரி பூவாத்தாவின் உழைப் பில் விளைவது அவளுக்குச் சொந்தமில்லை. அவள் உழைப் புக்குக் கூலி பதினைந்தோ, இரு பதோ அல்லது அதற்குச் சமமான நெல்... அதுவும் வருஷம் பூரா வும் நிச்சயமில்லை.

மெள்ள வெங்காயம் மிள காய்க் காரத்தை அனுபவித்துச் சோற்றைக் குடித்து முடித்தாள் பூவாத்தா. எதிரே அரைகுறை யாக நடவு போட்டிருந்த வயல், கை நீட்டிக் கூப் பிட்டது. - சோர்வைத் தட்டி விட்டுச் சேற்றுக்குள் காலடி வைத்தாள் பூவாத்தா... பொழுது சாய்கிறவரை நடவு இருக்கும்... இருந்தது.

கொத்துக்காரி தந்த அறு பது ரூபாயைக் கைநீட்டி வாங்கிய போது, கை நடுங்கியது பூவாத்தாளுக்கு. அந்த வாரத்துக்கு இரு ஜீவன் களுக்கு இது போதும்தான். எல்லா வாரமும் இப்படிக் கிடைக்காது.



**வா**ய்க்கால் மேட் டுத் தடம் ஏறிய போது, நனைந்த பாவாடையை முறுக்கிக் கையில் பிடித் துக் கொண்டு சொத சொத வென்று துவட்டாத தலை யுடன் முண்டமாய் ஓடி வந்து கொண்டிருந்தாள் அவள் மகள்...

''அம்மோய்... அம் மோய்...''

''ஏண்டி சனி யனே... பாவாடை யைச் சுத்திக்கிட்டு வாயேன்...''

''ரொம்ப ஈரமா

# நாற்றுக்கள்

இருக்கும்மா... அம்மா மத்தியானம் சோறு பத்த லேயில்லை... நாயர் கடையிலே பச்சி வாங் கித்தரயா... ஆசையா... இருக்கும்மா...''

''வாங்கித் தரேண்டி ராசா...''

''எட்டணாம்மா.''

''போனாப் போகட் டும்... வாங்கித் தரேன்...''

''அப்படியே ஒரு குச்சி முட்டாய்...''

''அது வேண்டாம்...''

''யம்மா... யம்மா...''

''சரி சரி, பாவாடையைச் சுத்துடி... ரோட்லே இப்படிப் போவக் கூடாது...''

எந்த நிறம் என்று தெரியாத அந்தப் பாவாடையை ஒரு மாதிரியாகச் சுற்றி முடிந்து கொண்டாள் செல்வி.

''யம்மா நாயர் கடை வந்துடிச்சி... நாயர் கடை வந்துடிச்சி...''

''பறக்காதடி சனியனே... அதான் வாங்கித் தரேன்னு சொல்லிட்டே வில்லே...''

கடைக்கு வெளியே நாலடி தள்ளி நின் றாள் பூவாத்தா...

''என்ன பூவாத்தா என்ன வேணும்...''

''புள்ளக்கு ஒரு பஜ்ஜி குடுங்க நாயரே...''

''நீ ஒன்று சாப்பி டேன்... சூடா இருக்கு...''

''அவ.. பஜ்ஜி இல் லைனுதான் அழுவுதாக் கும்... நீங்க ஒன்னு குடுங்க போதும்...''

நாயர் பெரிய பஜ்ஜி யாய்ப் பொறுக்கி, கூடவே பஜ்ஜி தூளையும் போட்டுச் செல்வியிடம் பொட்டலமாய்க் கொடுத் தான். அவனுக்கு இரக்கம் உண்டு... ஆனால் காண் பிக்க மாட்டான்... பசியறிந்து கொஞ்சம் உதவுவான். அதற்கு மேல் உதவினால் அவன் தெருவில்தான் நிற்க வேண்டும் என்று அவனுக்குத் தெரியும்.

''கூலி வாங்கிட்டே போவிருக்கு பூவாத்தா. பழய பாக்கி குடுத்துடேன்...''

''ரேசன் வாங்கணும் நாயரே... எனக் கொசரம் இல்லைன்னாலும் இந்தப் புள்ளைக்காக...'' மத்தியானச் சோறு பள்ளிக்கோடத்திலே போட்டுடறாங்க... ராத்திரி ஒரு வேளை ஏதோ போடணு மில்லை... வளர்ற புள்ளை...''

நாயருக்குப் பணம் வராது என்று நன் றாகத் தெரியும். அந்தக் கடன் அவனுக்குப் பாதுகாப்பு... கடன் தராதவர்கள் மறுபடி கேட்க மாட்டார்கள். பசிக் கொடுமையில் மறுபடி கேட்டாலும் கொடுத்துத்தான் ஆக வேண்டும். ஏழைக்கு ஏழை ஒத்தாசை செய்ய வேண்டும் என்பதுதான் விதி போல.

''உம் புருஷன் எங்க இருக்கான் தெரி யுமா...''

''தெக்கால இருக்காம்... அங்க ஒருத்தி யைச் சேத்துக்கிடுச்சாம்... அதை நம்பிப் பிர யோசனம் இல்ல...'' என்று மெள்ள நடக்க ஆரம்பித்தாள் பூவாத்தா.

பத்து வருஷம் முன்னே கல்யாணமும், கறிச்சோறும். மிக மட்ட ஜரிகை மினுக்கும் ஒரு புதுப் புடைவை. அந்தச் சேலைதான் அவள் வாழ்க்கையில் அதிக விலையில் எடுத்தது... ஒரு பழைய சினிமா மாதிரி ஞாபகம் இருந்தது... அந்தப் புடைவையில் ஜரிகை இருந்த இடம் பிரிந்து, பின்பு கொஞ்சம் உள் பாவாடை ஆகி, அப்புறம் குடிசைக்கு மறைப்பாகி அவள் புருஷனை மாதிரி காணாமலும் போய் விட்டது. புருஷன் ஒரு மூணு வருஷம் போல் வாழ்ந் தான். அவள் முழுமாச கர்ப்பமாய் இருந்த போது அவள் புருஷன் போய் விட்டான்.

> ''என் பாட்டன் அப்பன் ஆத்தா ஏன் எனக்கு இந்தப் பசியை, கிழிசலை, ஓடிப் போகிற புருஷனை மாத்திரம் சொத்தாகத் தந்தார்கள்... நான் என்ன பாவம் செய்தேன்... எனக்குத் தந்த இந்த துக்கத்தைத்தான் நானும் என் பிள்ளைக்குத் தரப் போகிறேனா... இது மாறவே போவதில்லையா... இதில் என்ன நியாயம் இருக்கிறது...''

ஸ்ரீகரு

எங்கே என்று தெரியவில்லை. மற்றவர்கள் சொன்னார்கள் என்று கைக்குக் கிடைக்கிற நாலு காசைச் செலவு செய்து நாலு இடம் தேடிப் பார்த்தாள். அவன் எங்கோ ஒருத்தியுடன் இருப்பதாகத் தகவல் தெரிந்தது. மறுபடி பூவாத்தா அவனைத் தேடிப் போகவில்லை. அதனால் என்ன பிரயோஜனம் என்று நினைத்துப் பார்த்தாள். பிரயோஜனமோ இல்லையோ தேடிப் போய்க் கூப்பிட கையில் காசு இல்லை.

பஜ்ஜியின் ருசியில் உலகத்தையே மறந்து நடந்து கொண்டிருந்தாள் செல்வி. மகளையே பார்த்துக் கொண்டு வந்த பூவாத்தாளுக்கு ஒரு சிந்தனை மெள்ள எழுந்தது.

''ஆமாம் நான் மாத்திரம் ஏன் இப்படிக் கஷ்டப்பட வேண்டும்... பண்ணைக்காரிச்சியின் குழந்தைக்கும் என் குழந்தைக்கும் என்ன வித்தியாசம்... அது ஏன் வசதியாய் இருக்கிறது... என் பாட்டன் அப்பன் ஆத்தா ஏன் எனக்கு இந்தப் பசியை, கிழிசலை, ஓடிப் போகிற புருஷனை மாத்திரம் சொத்தாகத் தந்தார்கள்... நான் என்ன பாவம் செய்தேன்... எனக்குத் தந்த இந்த துக்கத்தைத் தான் நானும் என் பிள்ளைக்குத் தரப் போகிறேனா... இது மாறவே போவதில்லையா... இதில் என்ன நியாயம் இருக்கிறது...''

''யம்மா ஒனக்குத் தெரியுமா... நேத்து எங்க ஸ்கூலுக்கு ஒரு அதிகாரி வந்தாரு... நான் நல்லாப் படிக்கிறேன்னு டீச்சரம்மா சொன்னாங்க... என்னைத் தட்டிக் குடுத்தாரு... நல்லாப் படிக்கணும் வேலைக்குப் போகணும்... டீச்சர் மாதிரி வரணும்னாரு. டீச்சர் அழகும்மா. சேப்பா, ஒசரமா இருக்கும். நானும் அப்படி ஒசரமா வருவே வில்லே...''

''வருவேம்மா... இன்னும் ஒசரமா வருவே... ஒரமா நட...'' என்று நடக்க, குடிசை வந்து விட்டது.

குடிசைக்குள் நுழைந்து, உடைந்து போன தகரப் பெட்டிக்குள் கூலிப் பணத்தை வைத்தாள். கவனமாக ஒரு ஐந்து ரூபாயை மட்டும் எடுத்துக் கொண்டாள். கொஞ்சம் பருப்புப் போட்டு ஒரு குழம்பு வைத்து, கருக்கென்று நாக்குக்கு ருசியாய்க் குழந்தைக்குச் சோறு போட வேண்டும்...''

அடுப்புக்கு முன்னே உட்கார்ந்திருந்த போது என்றுமில்லாத ஓர் உணர்வு மனசில் எழுந்தது. ஏதோ தப்புச் செய்கிறோம். இது தொடரப் போகிறது. இந்தக் குழந்தை கருங்கரடுச் சேற்றுக்கும் ஒரு வேளைச் சோற்றுக்கும்தான் ஆளாகும். ஏதாவது செய்ய வேண்டும். என்ன செய்வது. தனக்கு என்ன தெரியும். என்ன செய்தால் மூன்று வேளை சாப்பிடலாம். நல்ல துணி கட்டலாம். மேலே வரலாம். இந்தக் குழந்தை அந்த டீச்சர் மாதிரி வர வேண்டும். பண்ணைக் காரிச்சியின் பெண் மாதிரி ஒரு நாள் சைக்கிளில் பள்ளிக்கூடம் போக வேண்டும். என்ன செய்யலாம்.

தனக்கு என்ன தெரியும் என்று நீர்மானமாய் யோசித்த போது பதில் கிடைத்தது. ஆமாம், தனக்கு விதை நெல் விடத் தெரியும். நாற்று விடத் தெரியும். நடத் தெரியும், அறுப்பு அறுக்கத் தெரியும், இது போதும்... முழு விவசாயம் தெரியும். இது பெரிய விஷயம்...

கூலிக்குச் செய்கிற இதை, சொந்தமாகச் செய்யலாம். ஆனால் இதற்கு ஒரு நிலம் வேண்டும். பாசனத்துக்கு ஒரு கிணறு வேண்டும். நிலத்துக்கு என்ன செய்வது. விதை வாங்கப் பணம், அப்புறம் வரிசையாகச் செலவு. இதற்கெல்லாம் தனக்கு என்ன வசதி...

சோர்ந்து போனாள் பூவாத்தா.

விடியும் போதும் தன்னையறியாத துக்கம். சந்தை நாள் ஆனதால் வேலை இல்லை. எழுந்து வெளியே வந்து உட்கார்ந்தாள். கன்னி வாய்க்காலில் தண்ணீர் சளசளவென்று ஓடிக் கொண்டிருந்தது. கொஞ்சம் மண்ணைச் சலித்து வாயில் போட்டு பல்லைத் தேய்த்து முடித்தாள். வாய்க்காலில் வந்த தண்ணீரில் வாய் கழுவிய போது சட்டென்று ஒரு யோசனை பிறந்தது.

அந்த வாய்க்கால் தண்ணீர் கழிவு. ஒரு வருஷம் ஆறு மாசம் போல் ஓடும்... இந்த கஷ்டத்துக்காக மண்ணை உசத்திக் குடிசை போட்டிருந்தாள். ஊர் ஓரத்து நிலம். ஒரு பதினைந்து செண்ட் மாதிரி நாய்க்கர் குடும்பத்துக்குச் சொந்தமானது. அதில் குடிசை போடக் கூடாது என்பதால் அதற்கு ஒட்டின மாதிரி ஹைவேஸ்காரன் தொந்தரவு இல்லாமல் நாய்க்கர் நிலத்திலும் தொடாமல் குடிசை போட்டிருந்தாள். மூன்று வருஷமாய் இந்தத் தண்ணீர் உகம்பல்தான்

## 'உறவின ஊர்'கள்

'அம்மா'ப்பேட்டை
'தாத்தா'க்கோயில்
'பாப்பா'க்குடி
'அண்ணி'யூர்
'மண்ணி'யார் வாழ்க்கை

- இவையெல்லாம் குடந்தையைச் சுற்றி உள்ள சில கிராமங்களின் பெயர்கள் தான்!

- குடந்தை எல். ராம்பிரபு.

பிரச்னை. இந்தப் பதினைந்து சென்ட் எத்தனையோ காலமாய்ச் சும்மாதான் கிடக்கிறது. உபயோகப்படுத்த யாருமில்லை; ஏக்கர் கணக்கில் பண்ணையம் செய்கிறவர்களுக்கோ இது பயன்படாது. கேட்பாரற்ற நிலம்.

சோளம் போடலாம். ஏன் நெல் கூட விதைக்கலாம். விளைச்சல் சரியாக இருந்தால் கண்டிப்பாய் நாலு மூட்டை ஆகும். குத்திப் போட்டால் மூணு மாதத்துக்கு ரெண்டு வேளை கஞ்சி குடிக்கலாம்.

ஒரு சின்ன நெருப்புப் பொறி மனசில் விழுந்தது. தகதகவென்று பிடித்து எரிந்தது. நிலம் இருக்கிறது. தண்ணீர் இருக்கிறது. உழைப்பு இருக்கிறது. டவுனில் இருக்கும் நாய்க்கரும் நல்ல மனுஷன். உதவி கேட்டால் மறுக்க மாட்டார்.

பஸ் பிடித்து, பூவாத்தா நாய்க்கர் வீட்டுக்கு வந்த போது, நாய்க்கர் மகன், மகள், சம்சாரம் சகிதமாகக் கூடத்தில் உட்கார்ந்திருந்தார்கள். உள்ளே நுழைந்த பூவாத்தா சற்று ஒதுக்கமாய் ஒடுங்கி நின்றாள்.

''அட பூவாத்தா... வா... வா.. நல்லா இருக்கியா?''

''அய்யா தயவுங்க... நல்லா இருக்கேன்...''

''ம்... புருஷனைத் தேடி வந்தியா.. வந்துட்டானா...''

''அது எங்க வரப் போகுதுங்க. வந்தாலும் அதெல்லாம் பிரயோஜனப்படாது..''

''பொறுப்பத்த பசங்க. ம்... சரி, வந்த விஷயம் சொல்லு. ஏதாவது சாப்பிட்டியா..''

''வேண்டாங்கய்யா... அய்யாகிட்ட ஒரு விஷயமா வந்தேன்.''

''எங்கிட்டயா. சொல்லு. ஏதாவது பணம் கிணம் வேணுமா...''

''அதெல்லாம் வேண்டாங்கய்யா. அய்யாவுக்குத் தெரியும். எங்க பாட்டன் பாட்டி அத்தக் கூலி, ஆத்தா அப்பன் அத்தக் கூலி. நானும் அத்தக் கூலி. இன்னும் எங்க பரம்பர முச்சூடும் இப்படியே. இந்தச் சிசுவும் நாளைக்கு அந்தக் கூலியாகப் போகணுமாங்கறதுதான் ரோசனை. எவனாவது ஒருத்தன் கட்டிக்குவான், அப்புறம் விட்டுட்டு ஓடிப் போவான். அப்புறம் இதுவும் பொறம்போக்குக் குடிசையில் மானம் கெட்டு மதி கெட்டு, கூலி செஞ்சு, பட்டினி கெடந்து, செத்தாக் கூட பொதுப் பொணமா புளுத்துப் போய் ஊரான் தயவுலே பொதபடணும். இதான் என் ரோசனை. இதுக்கு ஒரு வழியே இல்லீங்களா. இது ஒரு ஈனப் பொழப்பில்லீங்களா...'' படபடவென்று கண்ணீர் வெடிக்க ஒப்புவித்த பூவாத்தாளை வெறிக்கப் பார்த்தார் நாய்க்கர். அவருக்கு வியப்பு மிகுந்தது.



''உங்கள் வாழ்க்கையில் தெரியாமல் செய்த பெரிய தப்பு ஏதாவது சொல்ல முடியுமா?''

''என் மனைவி மகாமகத்துக்குப் போகிறேன் என்று சொன்னபோது நான் வேண்டாம் என்று மறுத்ததுதான்!''

– கருப்பூர் எஸ். துரை.

''நல்ல சிந்தனை பூவாத்தா. இது வந்ததே பெரிசு. ஆனா என்ன செய்யப் போற? இத மாத்த ஏதாவது செய்யறதா யோசனை இருந்தாச் சொல்லு. நம்மால ஆனதைச் செய்யலாம்.''

கொஞ்சம் தயங்கினாள் பூவாத்தா.

''தப்பா நெனைக்கக் கூடாது எசமான். நம் ரோட்டோரத்துக் குறையை கொஞ்ச நாள் எனக்கு விடணும். அது ரொம்ப நாளா சும்மா கெடக்குது. நீங்க எனக்கு அதை விட்டீங்கன்னா கொஞ்சம் சோளத் தட்டை போடுவேன். நாலு தக்காளி, கத்திரிச் செடி வைப்பேன். ஒரு தடவை நெல்லு கூட நடுவேன். எசமான் தயவு வைக்கணும்...'' என்று சொல்லிக் கொண்டே மண்டியிட்டு உட்கார்ந்தாள். கைகள் இரண்டும் கூம்பி நீண்டன. ''நீங்க மனசு வச்சா இந்தச் சிசு மூணுவேளை சோறு திங்கும். ஒரு படிப்புப் படிக்கும். உத்தியோகம் பாக்கும். கவுரமா ஈனமில்லாம சாகும்...''

நாய்க்கர் சிலிர்ப்புடன் பூவாத்தாளைப் பார்த்தார். மனைவியைக் கூப்பிட்டு சன்னக் குரலில் என்னவோ சொன்னார். அந்த அம்மாள் உள்ளே போய்க் கொஞ்சம் பணத்துடன் வெளியே வந்தாள்.

''இந்தா பூவாத்தா... இருநூறு இருக்கு. அந்த நிலம் உன்னோடது. எப்ப வேணாமோ அப்ப திருப்பிக் கொடு. எப்ப எந்த ஒத்தாசை வேணுமானாலும் வா. சந்தோஷமா இரு. நல்லபடி முன்னுக்கு வா. பெருமாள் உன்னைக் கைவிட மாட்டார். உன் புது சிந்தனை உன்னைக் கை விடாது...''

பூவாத்தா பொதுவாய்த் தரையில் விழுந்து கும்பிட்டுக் கைநீட்டி, பணத்தை வாங்கிக் கொண்டாள். விம்மலுடன் கண்ணீரைத் துடைத்துக் கொண்டு, வீட்டை விட்டு இறங்கி ரோட்டுக்கு வந்தாள்.

காலடியில் மண் பயத்துடன் நெறிபட நடக்க ஆரம்பித்தாள் பூவாத்தா. நாய்க்கர் வீட்டில் கொடுத்த பூரியைக் கடித்துத் தின்று கொண்டு, வேகவேகமாக நடக்கும் அம்மாவைப் புரியாமல், அம்மாவுடன் ஓடிக் கொண்டிருந்தாள் செல்வி.



# அரசியல்: அன்று சேவை; இன்று தொழில்!

★ ரவி

கும்பகோணம் டவுன் ஹாலுக்குள் சென்று, 'முன்னாள் எம்.எல்.ஏ. வரதனைப் பார்க்க வேண்டுமே' என்று சொன்னவுடன், ஒரு மூலையில் படுத்திருந்தவரை எழுப்பிக் கூட்டி வந்தார்கள். கதர் வேட்டி, கதர் சட்டை, கையில் கோலுடன் மெதுவாக நடந்து வந்து நம்மருகே அமர்ந்தார், டி. ஆர். வரதன். கும்பகோணம் சட்டமன்றத் தொகுதியிலிருந்து முதன் முதலாக சட்டமன்றத்திற்குத் தேர்ந்தெடுக்கப்பட்டவர் இவர். வயது 81. ஆனாலும், பழைய நினைவுகள் பற்றிச் சொல்லும் போது, உற்சாகம் கொப்புளிக்கிறது.

''1926 என்று நினைக்கிறேன்... சைமன் கமிஷனை எதிர்த்து நாடெங்கிலும் போராட்டம் நடந்தது. இங்கு பள்ளி மாணவர்களும், 'Go back Simon' என்று முழங்கிக் கொண்டு ஊர்வலம் போனோம். அப்போது கூட்டத்திலிருந்த யாரோ ஒரு பையன் போலீஸாரைப் பார்த்துக் கல் வீசி விட்டான். போலீஸாரால் கல் வீசிய அந்தப் பையனைக் கண்டுபிடிக்க முடியவில்லை. மறுநாள் போலீஸார் பள்ளிக்கு வந்து, கல் வீசிய பையனைக் கண்டுபிடிக்க, எங்களை அணிவகுத்து நிற்கச் சொன்னார்கள். அப்போது ஒரு போலீஸ்காரர், 'நான்தான் கல் வீசியவன்' என்று சொல்லி விட்டார்; அவ்வளவுதான்! தலைமையாசிரியர் என்னைப் பள்ளியிலிருந்து விலக்கி விட்டார். அன்றே கும்பகோணம் பள்ளி மாணவர்களிடையே நான் ஹீரோவாகி விட்டேன். இதுதான் நான் அரசியலில் குதிக்கக் காரணமாக இருந்த சம்பவம்!'' என்று நினைவு கூர்கிறார் வரதன்.

அப்புறம், தனிநபர் போராட்டம், 144 தடை உத்தரவு மீறல் என்று பலவகைப் போராட்டங்களில் பங்குகொண்டு பெரிய பெரிய தலைவர்களுடனெல்லாம் சிறைவாசம் அனுபவித்திருக்கிறார். வரதனுக்குப் பத்து வேலி நிலம், ஆறு வீடுகள் இருந்தன

வாம். ''என் அரசியல் ஈடுபாட்டால் அத்தனை சொத்துக்களையும் இழந்து விட்டேன்'' என்று வரதன் சொல்லும் போது அந்தக் குரலில் சிறிதளவும் வருத்தம் தொனிக்காதது நமக்கு ஆச்சர்யத்தை உண்டாக்குகிறது.

''அப்போதெல்லாம் அரசியல் என்பது பொதுஜன சேவையாக இருந்தது. இப்போது தொழிலாக மாறி விட்டது. இதன் காரணமாகவோ என்னவோ, அனைவரிடமும் தேசபக்தி குறைந்து போனது போல் இருக்கிறது. இந்த நிலை நீடித்தால் மிகப் பெரிய ஜனநாயக நாடான நம் நாடும் ரஷ்யா மாதிரி உடைந்து சிதறிப் போகும் அபாயம் இருக்கிறது. இந்த மாதிரியொரு நிலையை இனி புதிதாக உருவாகப் போகும் தலைவர்களால்தான் தடுத்து நிறுத்த முடியும்!'' என்கிறார் வரதன்.

கிட்டத்தட்ட இதே கருத்தைப் பிரதிபலிக்கிறார், 1980 வரை தீவிர அரசியல்வாதியாக இருந்தவரும் தொழிலதிபருமான காசிராமன். குடந்தை நகராட்சியின் தலைவராக இருந்தது மட்டுமல்லாமல், எட்டு வருட காலம் கும்பகோணம் சட்டமன்றத் தொகுதியின் பிரதிநிதியாகவும் இருந்தவர். வீட்டுக்கு வீடு முனிஸிபல் பைப் கனெக்ஷன் கொடுத்து, நகர மக்களின் தாகத்தைத் தணித்தவர்.

''இந்த நூற்றாண்டின் துவக்கத்தில் தமிழ்நாட்டிலேயே ஏழாவது பெரிய நகரம் கும்பகோணம்தான். அந்தக் காலகட்டத்தில் கோயமுத்தூர் கூட, வளர்ச்சி இல்லாமல், பின்தங்கித்தான் இருந் தது. ஆனால் இப்போது பாருங்கள். கோயமுத்தூர் பிரமிக்கத்தக்க



* காசிராமன்



* வரதன்

வளர்ச்சி பெற்று விட்டது. அதற்குக் காரணம் அங்குள்ள மக்களின் உழைப்பு. ஆனால் நாங்களோ காவிரியை நம்பி நம்பியே வீணாகப் போய் விட்டோம்'' என்று சொல்லி வருத்தப்படுகிறார் காசிராமன்.

''அரசியல்வாதிகள் சுயலாபத்திற்காகக் காவிரிப் பிரச்னையைத் தீர்க்காமல் வைத்திருக்கிறார்கள். இப்போது இருக்கிற அரசியல் சூழ்நிலைகளைப் பார்க்கும் போது, 'நான் கூட அரசியலில் இருந்தேன்' என்று சொல்லிக் கொள்ளவே வெட்கமாக இருக்கிறது!'' என்கிறார்.

மூத்த அரசியல்வாதிகள் இப்படிச் சொல்லி வருத்தப்பட்டுக் கொண்டிருக்கும் இந்தக் காலகட்டத்தில் ''அரசியலை நல்லவர்கள் புறக்கணிப்பதால்தான் ஸார் அது மோசமானவர்களின் கையில் சிக்குண்டு தவிக்கிறது!'' என்று குரல் கொடுக்கிறார் கொரநாட்டு கருப்பூரைச் சேர்ந்த இளைஞரான எஸ். ரவி.

தலையில் குடுமி. நெற்றியில் பட்டை பட்டையாய் விபூதி. தொழில் குருக்கள். ஆனால் சார்ந்திருக்கும் கட்சி தி.மு.க.! கும்பகோணத்தில் தி.மு.க. சார்பில், பொதுக் கூட்டங்கள் நடந்தால் கட்சிக் கரை போட்ட வேட்டியுடன் மேடையேறி, ஆளுங்கட்சி அரசியலை ஒரு பிடி பிடிக்காமல் விடுவதில்லை இவர்!

ஆச்சரியமாக இருக்கிறதா? ''எனக்குச் சமுதாயப் பணிகளில் அதிக நாட்டம் உண்டு. ஒரு கட்சியில் இருந்து கொண்டு அதைச் செய்வதற்கு வாய்ப்பு அதிகம் என்பதால் தி.மு.க. வில் சேர்ந்தேன். நான் தி.மு.க.வைத் தேர்ந்தெடுத்ததற்கான முக்கிய காரணம், தலைவர் கலைஞரின் தீவிர தமிழ்ப்பற்றுத்தான்!'' என்கிறார் ரவி.

கடவுள் எதிர்ப்பு, பிராமணர் எதிர்ப்பு போன்ற தி.மு.க.வின் செயல்பாடுகளைப் பற்றி ரவி சிறிதும் அலட்டிக் கொள்வதில்லை. ''என்ன ஸார்! தி.மு.க. ஆட்சியில் அறநிலையத் துறை இல்லையா? திருவாரூர் தேரை ஓட வைத்தது தி.மு.க. ஆட்சியில் தானே ஸார். கலைஞர் எப்போதுமே தனிப்பட்ட பிராமணர்களுக்கு எதிரி இல்லை!'' என்று கூறும் ரவிக்குத் தேர்தலில் போட்டி போட வேண்டுமென்ற ஆசையெல்லாம் கிடையாதாம். ''தலைவரின் 'உடன்பிறப்பு' என்ற பதவியை விட பெரிய பதவி ஏதுமில்லை!'' என்கிறார்!

– இரா. பன்னீர்செல்வம், சுவீட் ரவி, மு. அய்யூப்கான்

விஷ்வக்சேனன்

"நீங்கள் இதுவரை மது அருந்தியதே இல்லையா?" அஞ்சனாவின் கேள்வியிலும் வியப்பு வழிந்தது. அவனை ஏற இறங்க ஒருமுறை பார்த்த சமுத்திரபந்தன் முறுவலுடன் கூறினான், "இல்லை. அறிவை மயக்கும் எதையும் நான் தொடுவதில்லை."

## 37. மங்கை கேட்ட உதவி; மரத்தில் பாய்ந்த அம்பு

தற்பெருமையில் நாட்டமுள்ளவனுக்குப் பதவியும் கிடைத்து விட்டால் உலகம் தன்னை அதிகம் மதிக்க வேண்டும் என எதிர்பார்க்கிறான். அதில் சிறிது குறைவோ, தாமதமோ ஏற்பட்டாலும் அதைப் பெரும் குற்றமாக எடுத்துக் கொள்கிறான். ஆடம்பரத்தையும் தற்பெருமையையும் விரும்பும் மனிதர்களின் மனோபாவமே இப்படித்தான்.

மந்திராலோசனை முடிந்து வெளியே வந்த மாறவர்மனைப் பின்தொடர்ந்த உபதலைவர்கள், அவனைத் தங்களது பாசறைகளுக்கு வருகை தருமாறு அழைத்துக் கொண்டும், அடையப் போகும் வெற்றிகளைக் குறித்துப் பேசியபடியும் வந்து கொண்டிருக்க, சற்றுத் தொலைவிலிருந்த ஈழத்து வீரர்கள் தன்னைக் கவனியாமல் சென்றதையும், அவர்களின் உபதலைவன் தன்னை வரவேற்காததையும் கண்ட மாறவர்மனுக்குச் சினம் பொங்க ஆரம்பித்தது.

ஒரு வீரனை அனுப்பி, ஈழத்து உபதலைவனை அழைத்தவன், அவனுடைய தாமதத்தையும் நிதான நடையையும் கண்டு அவனை எரித்து விடுபவன் போலப் பார்த்தான்.

"நான் கூப்பிட்டு அனுப்பியும் ஏன் நீ உடனே வரவில்லை?" என்று இரைந்தான்.

உபதலைவனது பதில் அலட்சியமாக வந்தது. "ஓடி வந்து நிற்க நான் பாண்டியர் படையைச் சேர்ந்தவனல்ல இளவரசே. நாங்கள் உங்களுக்கு உதவிபுரிய வந்தவர்கள்."

"உங்கள் இளவரசன் எங்கே?"

"மந்திராலோசனைக்காகச் சென்றவர் இன்னும் திரும்பவில்லை."

"மந்திராலோசனைதான் முடிந்து விட்டதே. எங்கே சென்றிருப்பார்?"

"அவராகக் கூறினாலன்றி அவர் செல்லுமிடங்களைக் குறித்து நாங்கள் கேட்பதில்லை."

மாறவர்மனுக்கு மேற்கொண்டு என்ன பேசுவது என்று புரியவில்லை. மாறவர்மன் முகத்தையும் ஈழ உபதலைவனது அலட்சியப் பார்வையையும் கவனித்தபடியே அங்கு வந்த மார்த்தாண்டனுக்கு ஏதோ உரசல் நேர்ந்திருப்பது புரியவே, "என்ன நேர்ந்தது?" என்று வினவினான்.

"பெரிதாக ஒன்றுமில்லை. எங்கள் இளவரசரைக் குறித்து பாண்டிய இளவல் விசாரித்துக் கொண்டிருந்தார்" என்றான் ஈழ உபதலைவன்.

"சரி. அனைவரும் அவரவர் இடங்களுக்குச் செல்லலாம்" என்று அனைவரையும் கலைத்து அனுப்பிய மார்த்தாண்டன், "மாறவர்மா, வா என்னுடன்" என்று விடுவிடுவென்று அரண்மனை நோக்கி நடந்தான். உள்ளே வந்தபின்னும் மாறவர்மனை மட்டும் இருக்கையில் அமரப் பணித்த மார்த்தாண்டன், கைகளைப் பின்புறம் கட்டியபடி உலவ ஆரம்பித்தான். அவனது ஆழ்ந்த சிந்தனையையும் முகத்தில் தெரிந்த கவலையின் ரேகைகளையும் கவனித்த மாறவர்மன், "மாமா, என்றும் சஞ்சலம் காட்டாத உங்கள் முகத்தில் கவலை தென்படுகிறதே?" என்றான்.

அவனை ஏறெடுத்து நோக்கிய மார்த்தாண்டன், "மாறவர்மா! நீ ஈழத்து உபதலைவனிடம் என்ன விசாரித்தாய்?" என்று வினவினான்.

# பாண்டியன் மகள்



''பராக்கிரமபாகு எங்கே சென்றான் என்று விசாரித்தேன்.''

''பராக்கிரமபாகு தற்போது குலசேகரன் அறையிலிருக்கிறான். இருவரும் பேசுவது அறைக் காவலர்களுக்கு ஒரு வார்த்தையும் கேட்கவில்லை. பெரும் ரகசியமாக இருக்கிறது!''

''இதில் நாம் கவலைப்பட என்ன இருக்கிறது...'' என்று இழுத்த மாறவர்மனுக்குத் தன் அந்தரங்க ஒற்றன் மாடத்தேவன், கொங்குமன்னனது அரண்மனையில் நடந்ததாகக் கூறிய செய்திகள் மெல்ல நினைவுக்கு வர முகம் மாறத் தொடங்கியது. ''அதிலும் போர் துவங்க இருக்கும் இந்தச் சமயத்தில் இருவரும் சதி செய்து...'' அதற்கு மேல் அவன் எண்ணங்கள் விபரீதமாகப் போகவே, முகத்தில் திடீரும் ஆத்திரமும் படரத் தொடங்கின.

''புரிகிறதா மாறவர்மா, என் கவலைக்கு என்ன காரணமென்று?'' மார்த்தாண்டனின் குரல் மெல்ல ஒலித்தது.

''குலசேகரனை வசப்படுத்த முயற்சி செய்கிறானா பராக்கிரமபாகு?''

"முயற்சி செய்வதா? ஏற்கெனவே அவன் வசப்பட்டு பல நாட்களாகின்றன." மார்த்தாண்டனுடைய முகம் வேப்பங்காயை விழுங்கியது போலிருந்தது. மாறவர்மன் திடுக்கிட்டான்.

"ஆம் மாறவர்மா! இந்தத் தருணத்தில் உன்னை நீக்கி விட்டால் அடுத்து பழைமையான கொங்கு வம்சத்து இளவல் பட்டமேற்பதை யாரும் மறுக்க மாட்டார்கள். படைத்தலைவன் மோகூர்ப் பழையனையும் பராக்கிரமபாகுவையும் எதிர்க்க, பாண்டி மண்டலத்தில் யாரும் துணிய மாட்டார்கள்."

மாறவர்மனுக்கு அது உண்மையென்று புரிந்ததால் வாயடைத்துப் போயிருந்தான்.

மார்த்தாண்டனின் சொற்கள் சிந்தனையினூடே தொடர்ந்து ஒலித்தது. "மாறவர்மா! நம்முடனும் பராக்கிரமபாகுவுடனும் நன்றாகப் பழகும் ஒரே நபர் இந்த சமுத்திரபந்தன். சேரலாதர் நமக்கு உதவ அனுப்பிய இந்தச் சேர ஒற்றனுக்கு நமது நலன்தான் முக்கியமாக இருக்க வேண்டும். அவனிடம் தனியே இதைப் பற்றிக் கூறுவோம். சதியைப் பற்றிய விவரங்கள் ஏதும் கிடைத்தால் பிறகு நாம் பார்த்துக் கொள்ளலாம்."

மாறவர்மனுக்கு இது சரியான யோசனையாகப் பட்டது. தனது காவலைப் பலப்படுத்திக் கொள்ள எண்ணி, மாடத்தேவனை அழைத்தான். வாயிற்காவலனிடமிருந்து பதில் வந்தது.

"பிரபு! அவன் தன் உறவினரைக் காண பரதவர் குடியிருப்புக்குச் சென்றிருக்கிறான்."

"சரி. அவனையும் அந்த சேரநாட்டுப் பிரபு சமுத்திரபந்தனையும் நான் அழைத்ததாகக் கூறி அழைத்து வா" என்று உத்தரவிட்டான் மாறவர்மன்.

நிலா வானின் உச்சியை நெருங்கிக் கொண்டிருந்தது. நிலவை எட்டிப் பிடிக்க முயன்ற அலைகள், கப்பலின் பக்கப் பலகையில் மோதியதால் தளத்தில் நீர்த் திவலைகள் தெறித்துக் கொண்டிருந்தன. உயர எழுந்த அலைகளாலும், வீசிய காற்றினாலும் மரக்கலம் ஊஞ்சலைப் போல மெதுவாக ஆடிக் கொண்டிருந்தது.

நிலவொளி ஒரு பக்கமாகப் பாய்ந்ததால் வழவழுத்த கன்னம் பொன்னிறமாக மின்ன, அஞ்சனாதேவி சமுத்திரபந்தனை வரவேற்றாள். சற்று கலைந்திருந்த அவள் கருண்ட கூந்தலும், ஆடைகளும் அவள் சற்று முன்புதான் படுக்கைக்குச் சென்றிருக்க வேண்டுமென்பதையும் பராக்கிரபாகுவின் வருகையால் வீரர்கள் ஏற்படுத்திய அரவம் அவளை எழுப்பியிருக்க வேண்டுமென்பதையும் புலப்படுத்தின. கலைந்து கிடந்த கருண்ட குழல்கள் கடல் காற்றில் ஊசலாட, விழிகளில் பரவிய மயக்கமும், நீரோட்டம் பாய்ந்து நிலவொளியில் பளபளத்த அவள் இதழ்களும் எந்த திட சிந்தனையையும் கலங்க அடிக்கக் கூடியதாக இருந்ததைக் கண்ட சமுத்திரபந்தன் இதழ்களில் முறுவலொன்று பிறந்தது.

"சேரத்து ஒற்றர் வர வேண்டும். இரண்டாவது முறையாகச் சந்திக்கிறோம்" — யாழை மீட்டுவது போல் ஒலித்தது அவள் கிள்ளைக் குரல்.

"வாருங்கள், உள்ளே சென்று அமர்ந்து பேசுவோம்" அழைத்தான் பராக்கிரமபாகு.

தளத்தின் ஒரு கோடியில் அமைந்திருந்த அறையில் நுழைந்த சமுத்திரபந்தன், அது போர்க் கலத்தின் தலைவனது அறையாக இல்லாமல் அழகிய மரச் சிற்பங்களுடனும், மரச்சுவரில் தீட்டிய வண்ணச் சித்திரங்களுடனும், மெல்லிய இருப்புச் சங்கிலிகளில் தொங்கிய சர விளக்குகளுடனும் இருந்ததைக் கண்டான். சீனத்துக் கலயங்களும், யவனப் பதுமைகளும் ஆங்காங்கே இருந்தன. இருக்கைகளும் பஞ்சணையொன்றும் நல்ல இலவம் பஞ்சினால் மெத்தென்று சுகமாக அமைக்கப்பட்டிருந்தன. சாளரத்தில் தொங்கிய சீலைகளும் மெல்லிய பட்டால் நெய்யப்பட்டு, ஈழத்து ராஜ சின்னங்களுடன் இருந்ததைக் கவனித்த சமுத்திரபந்தன், அந்த அறை இளவரசிக்காகவே உருவாக்கப்பட்டது என்று கண்டுகொண்டான்.

வெள்ளித் தட்டு ஒன்றில் கனிகள் சிலவற்றையும் ஈழத்து மதுவையும் ஏந்தியபடி வந்த அஞ்சனாவின் இதழ்களில் சமுத்திரபந்தனின் பிரமித்த பார்வையைக் கண்டு முறுவலொன்று பூத்தது.

"சமுத்திரபந்தரே! நீங்கள் இதுவரை இத்தகைய மதுவை ருசித்திருக்க மாட்டீர்கள்" என்றபடி மதுக்கிண்ணமொன்றை நீட்டினான் பராக்கிரமபாகு.

"எனக்கு மது அருந்தும் பழக்கமில்லை இளவரசே" என்று மறுத்தவனை வியப்புடன் பார்த்தான் பராக்கிரமபாகு.

சமுத்திரபந்தன் இரண்டொரு கனிகளை மட்டும் எடுத்துக் கொண்டான்.

"நீங்கள் இதுவரை மது அருந்தியதே இல்லையா?" அஞ்சனாவின் கேள்வியிலும் வியப்பு வழிந்தது.

அவளை ஏற இறங்க ஒருமுறை பார்த்த சமுத்திரபந்தன் முறுவலுடன் கூறினான், "இல்லை. அறிவை மயக்கும் எதையும் நான் தொடுவதில்லை."

அவன் விழிகளிலும் குரலிலும் தொனித்த விஷமம் அவன் எதைக் குறிப்பிடுகிறான் என்பதை அஞ்சனாவுக்குத் தெளிவாகவே புரிய வைத்தது.



## பாடசாலை வித்யார்த்திகளின் ஒரு பகுதி

மஹான் ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதரவர்களால், 1542-ல் ஸ்தாபிக்கப்பட்டு, தொடர்ந்து நடந்து வரும் வேத பாடசாலையை ஸமிதியானது தாய் போல் இயங்கிக் காப்பாற்றி வருகிறது. தற்போது பாடசாலையில் 120 மாணாக்கர்கள் வேதாத்யயனம் செய்து வருகின்றனர். அவர்களுக்கு ஓர் நாள் உணவளிக்க,உணவு வகையினை அனுசரித்து சுமார், முறையே ரூ. 300/' அல்லது 500/' ஆகிறது. இந்தத் தர்மம் நிரந்தரமாய் நடக்க ரூ. 3000/' அல்லது 5000/' மூலதனம் ஏற்படுத்தியோ, அவ்வப்போது தொகை அனுப்பியோ, ஒரு குறிப்பிட்ட தினத்தில் உணவளிக்கும் கைங்கர்யத்தில் பங்குகொள்ளக் கோருகிறோம். நன்கொடை அனுப்ப வேண்டிய பொருளும் முகவரியும் :

**அத்வைத வித்யாசார்யா மஹாராஜா ஸாஹேப் ஸ்ரீ கோவிந்த**
**தீக்ஷிதர் புண்ய ஸ்மரண ஸமிதி,**
**D76, மூன்றாவது கிராஸ் தெரு, ஸ்ரீநகர் காலனி,**
**கும்பகோணம் - 612 001.**

## வேத வைதிக நூல்கள் (விலை தபால் செலவு உட்பட)

**I**
1. ரிக்வேத ஸ்ருக்ஸா - நாகராக்ஷரம் - விலை ரூ. 60/-
2. யஜுர்வேத தைத்திரீய ஸம்ஹிதா - நாகராக்ஷரம் - 7 காண்டங்கள் - விலை ரூ. 165/-
3. ஸாமவேத ஸம்ஹிதா - கிரந்தாக்ஷரம் - 2 பாகங்கள்
(முதல் பாகம் - ரூ. 185/-, இரண்டாம் பாகம் - ரூ. 210/-)
4. ஸாமவேத அஷ்டப்ராம்மணம் - நாகராக்ஷரம் - 3 பாகங்கள்
(முதல் பாகம் - ரூ. 210/- இரண்டாம் பாகம் - ரூ. 110/- மூன்றாம் பாகம் - ரூ. 85/-)
5. ஸாமவேத பூர்வாபர ப்ரயோகம் - கிரந்தாக்ஷரம் - ரூ. 80/-
6. சாந்தி குஸுமாகரம் (2 பாகங்கள்) - விலை ரூ. 170/-
(1 ம் பாகம் ரூ. 85/- 2 ம் பாகம் ரூ. 85) (கிரந்தாக்ஷரம்)

**II** கிரந்தாக்ஷரத்தில் காரிகையுடன் பிரம்மஸ்ரீ முத்துச்ரௌதிகளால் பதிப்பிக்கப்பட்ட கிரந்தங்களின் மறுபதிப்புகள்
1. போதாயன பூர்வாபர ப்ரயோகம் - ரூ. 95/-
2. ஆபஸ்தம்ப பூர்வாபர ப்ரயோகம் - ரூ. 90/-
3. ஆபஸ்தம்ப ச்ராத்த ப்ரயோகம் - ரூ. 55/-
4. ஆச்வலாயன பூர்வாபர ப்ரயோகம் - ரூ. 85/-
5. ஆச்வலாயன ச்ராத்த ப்ரயோகம் - ரூ. 50/-
6. கல்ப சிந்தாமணி - ரூ. 55/-

**III** நாகராக்ஷரம்
1. மனாசேச்லோக - ராமதாஸரின் ச்லோக - ரூ. 25/- (மராத்தி மூலம் தமிழ் பதவுரை)
2. ஸ்ரீ ராதாக்ருஷ்ண பூஜாவிதானம் - ரூ. 25/- (ஸம்ஸ்க்ருதமூலம் - தமிழ் பதவுரை)
3. நளோதந்தம் - நைஷதகாவ்யத்தின் சுருக்கம் - ரூ. 25/- (ஸம்ஸ்க்ருத மூலம் - ஆங்கில பதவுரை)
4. வேதபாட வழிமுறை (syllabus) ரிக், யஜுர், ஸாம - ரூ. 25/-
5. ராமோதந்தம் - நாகராக்ஷரம் - விலை ரூ. 25/-

V.P.P. யில் அனுப்புவதில்லை. முழுத் தொகையையும் M.O. (or) Draft மூலம் கீழே குறிப்பிட்டுள்ள முகவரிக்கு அனுப்பவும். செக் மூலம் அனுப்ப வேண்டாம். "எமது நூல்கள் பற்றிய விவரமான லிஸ்ட்டைக் வாங்க விரும்புவோர் ரூ. 3/- தபால்தலை அனுப்பி பெற்றுக் கொள்ளலாம்."

**பிரஸிடெண்ட் - டிரஷரர் - A.V.M.S.G.D.P.S. சமிதி, D-76, மூன்றாவது கிராஸ் தெரு, ஸ்ரீநகர் காலனி, கும்பகோணம் - 612 001.**

நேரில் வாங்க விரும்புவோர் கண்டிப்பாக - ராஜா வேதகாவ்ய பாடசாலை, யாகசாலை தெரு, (சக்கரை படித்துறை அருகில்) கும்பகோணம் - 612 001 என்ற விலாசத்தில் பெற்றுக் கொள்ளவும்.

''உங்களுக்கிருக்கும் திடசித்தம் மாற வர்மருக்கும் இருந்தால் நன்றாக இருக்கும்'' என்றான் பராக்கிரமபாகு.

''ஏன்? அவர் மதுரையை மீட்பதில் திட மாகத்தானே இருக்கிறார்?''

''ஆம். ஆனால் அதற்கான வழிமுறை களை வகுப்பதிலும், திட்டங்கள் தீட்டுவதி லும் அத்தனை அனுபவம் போதாது அவ ருக்கு.''

''அதற்குத்தான் மார்த்தாண்டரும் சோம சுந்தரப் பாண்டியரும் இருக்கிறார்களே!''

''இருந்தாலும் சொல்லிக் கொடுத்த வார்த்தையும் கட்டிக் கொடுத்த சோறும் எத்தனை நாள் வரும் சமுத்திரபந்தரே?''

சமுத்திரபந்தன் முகத்திலிருந்த குறு நகை, பெரிதாக விரிந்தது.

''தமிழ்ப் பழமொழிகளை நன்றாக அறிந்திருக்கிறீர்கள் இளவரசே!''

அவன் பாராட்டைக் கவனியாதவன் போல் பேசிய பராக்கிரமபாகு, ''அரியணை யில் அமர்ந்தபின் அவர் உள்நாட்டு சல சலப்புகளையும் சோழனின் பலமான எதிர்ப்பையும் எப்படி எதிர்கொள்வார் என் பதுதான் சந்தேகத்திற்குரியதாக இருக்கி றது'' என்றான்.

''உண்மைதான், ஆட்சியை ஸ்திரப் படுத்திக் கொள்வது சற்றுக் கடினமாகத் தான் இருக்கும். இடையில் பாண்டியர் மகளைப் பற்றிய செய்தி வேறு பரவினால் இன்னும் சிரமம்தான்.''

சமுத்திரபந்தன் மெல்லத் தான் விரும் பிய திசையில் பேச்சைச் செலுத்துவதைக் கண்ட பராக்கிரமபாகு, மிக கவனத்துடன் வார்த்தைகளைத் தேடிப் பேச ஆரம்பித் தான் :

''சமுத்திரபந்தரே, மாறவர்மரை விட வீரத்திலும் அறிவிலும், வம்சாவளியிலும் உயர்ந்தவரும், சோழருடன் ஓரளவு நட்புக் கொண்டவருமான ஒருவர் ஏன் மதுரை அரியணையில் அமரக் கூடாது?''

சமுத்திரபந்தன் முகத்தில் திகைப்பு நிலவியது. குரலிலும் அது தெரிந்தது.

''அப்படி ஒருவர் பாண்டிய வம்சத்தில் இருக்கிறாரா?''

''இருக்கிறார் என்பது என் எண்ணம்.''

''யார் அவர்?''

''கொங்குப் பாண்டிய இளவல் குல சேகர பாண்டியர்.''

சமுத்திரபந்தன் எதிர்பார்த்த பதில்தான் அது. அவன் சிந்தனை, கொங்கு மன்னன் அரண்மனையில் நடந்த விவரங்களாக ஜெயந்தன் கூறியவற்றை எண்ணியது. பராக் கிரமபாகு எப்படியும் மாறவர்மனை நீக்கி விட்டுக் குலசேகரனை மன்னனாக்க முயற்சி

செய்கிறான் என்பது புரிந்தது. அவன் ஊடுருவும் விழிகள் எதிரில் மௌனமாக நின்றிருந்த அஞ்சனாதேவியை ஏறெடுத்து நோக்கின. அவள் முகத்தில் தெரிந்த ஆவல் அவனுக்கு நடந்த கதையைப் புரிய வைத்தது. அவன் கூரிய அறிவில் பல உண்மைகள் பளிச்சிட்டன.

என்ன காரணத்தாலோ மாறவர்மனை அஞ்சனாதேவிக்குப் பிடிக்காமல் போனதால் பராக்கிரமபாகு குலசேகரனை வலை வீசிப் பிடித்திருக்கிறான். அதிக அனுபவமற்ற அந்த இளைஞன் இத்தகைய அழகியை மணக்கவும், ஈழத்து உதவியுடன் மன்னனாகவும் ஒப்புக் கொண்டிருந்தால் அதில் ஆச்சரியமேதுமில்லை.

இடையில் தடையாக இருப்பது மாறவர்மன். அவனை நீக்க பராக்கிரமபாகு எந்த உபாயத்தையும் கையாளத் தயங்க மாட்டான்.

சமுத்திரபந்தன் அடியோடு மௌனத்தில் ஆழ்ந்து விட்டதையும் அவன் கூரிய விழிகள் திடீர் திடீரென்று பளிச்சிட்டாலும் முகத்தில் எந்த மாறுதலும் தெரியாததையும் கவனித்த பராக்கிரமபாகு, எந்த உணர்ச்சியையும் வெளியில் காட்டிக் கொள்ளாதவனும் எந்த அரசியல் சிக்கலையும் பதற்றமின்றி, நிதானமாக அலச வல்லவனுமான ஒருவன் தன்னெதிரே அமர்ந்திருப்பதைப் புரிந்து கொண்டான்.

''என்ன சமுத்திரபந்தரே, ஒரேயடியாக மௌனமாகி விட்டீர்கள்? அஞ்சனாதேவி குலசேகரரை மணக்க விரும்புகிறாள். மதுரை மன்னனாக அவர் அமரும் பட்சத்தில் சேர நாட்டுக்கும் எமக்கும் உள்ள உறவு பலப்படும். கருவூர் வஞ்சி முதல் நடு நாட்டு எல்லை வரை உங்களுக்கு வழங்க நான் ஏற்பாடு செய்கிறேன். குமரியும் மலைக் கணவாயை அடுத்த பகுதியும் உங்கள் வாணிபத்திற்குப் பெரும் துணையாக இருக்குமல்லவா?'' என்று ஆசை காட்டினான் பராக்கிரமபாகு.

சமுத்திரபந்தன் மனத்தில் வருத்தமே மேலோங்கியது. தமிழகத்தைப் பங்கு போட்டுத் தமிழருக்கே வழங்க அந்த அயல் நாட்டவன் பேரம் பேசும் நிலை வந்ததைக் கண்டு மனதுக்குள் கொதித்த அவன், 'ஒற்றுமையிழந்த பாண்டியரை அடியோடு ஒடுக்கி, இவனையும் தமிழகத்திலிருந்து விரட்டுகிறேன்; உதவி புரியும் சேரலாதனையும் குலோத்துங்க சோழருக்குச் சிற்றரசனாக்குகிறேன்'' என்று தனக்குள் கூறிக் கொண்டான்.

அவன் எண்ணம் இவ்வாறாக இருந்த போதிலும் முகத்தில் அதே குறுநகை தவழ பராக்கிரமபாகுவைப் பார்த்து, ''இள

# அருள்வாக்கு



மனுஷ்யராகப் பிறந்து விட்டால் கஷ்டம் ஆபத்து எல்லாம் வரத்தான் செய்யும். அதை உணர்த்தத்தான் புத்தாண்டில் முதலில் பூக்கும் வேப்பம் பூவை உண்கிறோம். வருஷத் தொடக்கத்திலேயே கசப்பை ஏற்கிறோம். ஏறக்குறைய வருஷ முடிவில் வரும் பொங்கல் பண்டிகையில் கரும்பை ருசிக்கிறோம். ஆரம்பத்திலேயே இனித்து விட்டால் முடிவில் கசந்து போகும். கசப்பென்று வெறுப்படைய வேண்டாம். கசப்பையே இயற்கை அன்னையின் - அல்லது தர்ம நியதியின் - மருந்தாக எதிர் கொண்டு வரவேற்போம். அதனால் போகப் போக முடிவில் எந்த அநுபவத்தையுமே தித்திப்பாக எண்ணுகிற மனப்பான்மை உண்டாகும்.

ஸ்ரீ ராமனுக்கு வனவாசத்தில் ஏற்பட்ட கஷ்டம், ஆபத்து எல்லாம் பெரியவை. ஊருக்குப் போகும் குழந்தைக்குத் தாயார் கட்டுச் சாதம் கொடுப்பது போல், ராமன் வனவாசம் செல்லும் போது கௌசல்யையும் செய்தாள். 'பதினான்கு வருஷம் கெடாமலிருக்கும் பக்ஷணம் எது? குழந்தைக்கு எதைத் தரலாம்?' என்று நிரம்ப ஆலோசித்தாள் கௌசல்யை. பிறகு, நிரந்தர பக்ஷணமான தர்மத்தைத்தான் கட்டிக் கொடுத்தாள்.

"ராகவா, தைரியத்துடனும் நியமத்துடனும் நீ பாதுகாக்கும் தர்மமே உன்னைப் பாதுகாக்கும்" என்று சொல்லித் தர்மத்தை ராகவனுக்குத் துணை அனுப்பினாள்.

*யம் பாலயஸி தர்ம த்வம்*
*த்ருத்யா ச நியமேன ச*
*ஸ வை ராகவ சார்தூல*
*தர்மஸ்த்வாம் அபிரக்ஷது*

தர்மமே இறுதியில் ராமனுக்கு ஜயத்தைப் பெற்றுத் தந்தது. தர்ம மார்க்கத்தில் ஒருவன் இருந்தால் பிராணிகள் கூட அவனை ஆதரிக்கும்; அதர்மத்தில் விழுந்தால் உடன் பிறந்தவனும் எதிரியாகி விடுவான் என்பதை ராமாயணம் நிரூபிக்கிறது. ஸ்ரீ ராமனை வானரங்களும் ஆதரித்தன. ராவணனையோ சகோதரன் விபீஷணனும் விட்டு விலகினான்.

- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.

வரசே, நான் என்ன செய்ய வேண்டுமென்று கூறுங்கள்'' என்றான்.

பராக்கிரமபாகுவின் முகத்தில் திருப்தி நிலவியது. அஞ்சனாதேவியின் புன்முறுவல் பெரிதாக மலர்ந்தது.

''சமுத்திரபந்தரே! நீங்கள் சோழர் படை இந்தப் போரில் அதிகம் கலக்காதபடி பார்த்துக் கொண்டால் போதுமானது'' என்றான் பராக்கிரமபாகு.

சோழர் படைத்தலைவர் காலிங்கராயன் இத்தனை நேரம் பராக்கிரமபாகு கூறியதைத்தான் நிறைவேற்றிக் கொண்டிருப்பார் — ஆனால் வாள் முனையில் வலுக் கட்டாயமாக என்று எண்ணிய சமுத்திர பந்தன் தனக்குள் நகைத்துக் கொண்டான்.

''அப்படியே செய்கிறேன்'' என ஒப்புக் கொண்டான்.

அத்தனை நேரத்திற்கு மேல் வலுக்கட்டாயமாக சமுத்திரபந்தனுக்கு விருந்தளித்த பராக்கிரமபாகு, பலமாக உபசரித்து அவனைத் திணறடித்தான்.

**கா**ர்கையின் காலைப் பொழுது மிக மனோகரமாயிருந்தது. எங்கிருந்தோ வந்த கடற் பறவைகள் பாய் மரங்களிலும், தளத்தின் மீதும் உலவின. உட்கார்ந்தபடியே உறங்கிக் கொண்டிருந்த மாலுமிகளின் தலையிலும் சில அமர்ந்து, கழுத்தை நீட்டி அப்படியும் இப்படியும் பார்த்தன. கீழ்த் திசையில் சிவந்து மிதந்த மேகங்கள் மெல்ல நிறம் மாறிக் கொண்டிருந்தன. இரவில் பலமாகப் பொங்கிய அலைகள் அடங்கி, கலத்தின் பக்கப் பலகைகளைத் தாக்குவதற்குப் பதில் தட்டிக் கொடுத்தன.

பராக்கிரமபாகுவிடமும் அஞ்சனாதேவியிடமும் விடைபெற்ற சமுத்திரபந்தன் படகில் குதித்தான். படகு துறைமுகத்தை நோக்கி நகர்ந்தது.

கரையை அடைந்து அரண்மனையை நெருங்கிய சமுத்திரபந்தனை வழியிலேயே சந்தித்த பாண்டிய வீரனொருவன் பாசறையில் மாறவர்மரும் மார்த்தாண்டரும் காத்திருப்பதாகக் கூறினான்.

விரைவில் வருவதாகக் கூறிய சமுத்திர பந்தன் சற்று சிந்தித்தபடியே பெரும் ஆலமரமொன்றின் நிழலில் நின்றான்.

இரவில் தனது நடவடிக்கைகளை மாறவர்மன் அறிந்துதான் அழைக்கிறானோ என்ற சந்தேகம் எழுந்தது அவனுக்கு. அல்லது மாடத்தேவனைப் பற்றி ஏதேனும் அறிந்திருப்பானோ என்றும் தோன்றியது.

அரண்மனைக்குச் செல்லாது நேரே பாசறைக்குச் சென்று, வருவதை எதிர்கொள்வது என்று முடிவெடுத்தவன், பாசறை இருந்த திசைநோக்கித் திரும்பினான்.

அவன் திரும்பிய மறுகணம் விர்ரென்று காற்றைக் கிழித்தபடி வந்த அம்பொன்று மரத்தில் பதிந்து நின்றது!

(தொடரும்)

# வளர்கின்ற இத்தேக்கு கன்றுகள் உங்களுக்கு அளிக்க இருக்கின்ற ரூ. 36 லட்சத்தை இப்படத்தில் கண்டு கொள்ள முடிகிறதா?



போடிநாயக்கனூரில் அனுபவ் தேக்கு மரப்பண்ணையின் ஒரு பகுதி.

உங்களால் முடியும். தேக்குவள பூமியான போடிநாயக்கனூரில் ஒரு அனுபவ் தேக்கு பண்ணையை வாங்கினால் போதும்.

இத்திட்டத்தில் முதலீடு செய்யும் தொகைக்கு ஏற்ப ரூ 36லட்சம்/ ரூ 18லட்சம் பெறுவீர்கள்.

## திட்டம்

| முதலீட்டுத் தொகை ஒரே தவணையில் செலுத்தினால் ரூ | மரங்கள் எண்ணிக்கை | நிலம் (ச.அடி) | உத்திரவாதமான தேக்கு மரம் (கன அடி) | வருமானம் | | |
|---|---|---|---|---|---|---|
| | | | | 6-ம் ஆண்டு முடிவில் ரூ | 12-ம் ஆண்டு முடிவில் ரூ | 20-ஆம் ஆண்டு முடிவில் ரூ |
| 28,800 | 36 | 3600 | 1440 | 20,000 | 85,000 | 36 லட்சம்* |
| 14,400 | 18 | 1800 | 720 | 10,000 | 42,500 | 18 லட்சம்* |

* 20 ஆண்டுகளுக்குப்பிறகு கனஅடி ரூ.2500 என்ற அடிப்படையில் கணக்கிடப்பட்டது.

| மாதத் தவணையில் செலுத்தினால் | திட்டம் - அ ரூ | திட்டம் - ஆ ரூ |
|---|---|---|
| முன்பதிவுத் தொகை | 600 | 600 |
| நிலப்பதிவு செய்ய செலுத்த வேண்டிய தொகை (பதிவு செய்த 3 மாதங்களில்) | 6000 | 3000 |
| மாதாந்திர தவணைத் தொகை | 600 × 49 மாதங்கள் = 29400 | 600 × 24 மாதங்கள் = 14400 |




**அனுபவ் பிளான்டேஷன்ஸ் லிமிடெட்.**

11, சோமசுந்தரம் தெரு, தி.நகர், சென்னை-600 017.

போன்: 8283316/8263302/8267248/8254155/8282629/8282833

ஃபேக்ஸ் : 044-8284967.

ஆமாம்! அனுபவ் தேக்கு மரப்பண்ணையில் முதலீடு செய்ய விரும்புகிறேன்.
உடனே உங்கள் விண்ணப்பபாரம் அல்லது உங்கள் பிரதிநிதியை அனுப்பி வைக்கக் கோருகிறேன்.

பெயர் : ....................

தொழில் : ....................

முகவரி : ....................

....................

பின் : .................... போன் : ....................

இந்த கூப்பனை கம்பெனி முகவரிக்கு அனுப்பவும்.

Advise/3392/93



* அம்மன் ஊர்வலம்

# இந்த அம்மன் உக்கிரமானவள்!



* பிரம்மாவுக்குக் கோயில்

படம் : சுவீட் ரவி

கும்பகோணம் என்றாலே ஏராளமான சைவ - வைணவ ஆலயங்கள் நிறைந்த நகரம் என்பது அனைவரும் அறிந்த செய்தி. ஆனால் பிரம்மாவுக்குள்ள இரண்டே இரண்டு கோயில்களில் ஒன்று, கும்பகோணத்தில்தான் இருக்கிறது என்பது பலரும் அறிந்திராத ஒரு செய்தி.

இன்னொரு புதிய செய்தியும் இருக்கிறது. அதுதான் கும்பகோணத்துக்குப் புனித யாத்திரை வரும் பக்தர்கள் நேரடியாகக் கும்பகோணத்துக்கு வந்து தரிசனம் செய்வதில் ஒரு பயனும் இல்லை என்கிற செய்தி. பிறகு எப்படி வர வேண்டும்?

இதற்கு அந்த மங்களாம்பிகை தேவியே வழிகாட்டியிருக்கிறாள்!

முன்பு, அமுதம் நிறைந்த கலசத்தைச் சிவபெருமான் அம்பெய்து உடைத்த போது, அதிலிருந்து வெளிப்பட்ட அமுதம் நாலாபக்கமும் தெறித் தெறித்து ஐந்து குரோச (ஒரு குரோசம் என்பது இரண்டே கால் மைல்) தூரத்துக்குப் பரவியதாம். அப்போது, கும்பகோணத்தைச் சுற்றியுள்ள திருவிடைமருதூர், திருநாகேச்சரம், தாரேச்சுரம், சுவாமிமலை, கொரநாட்டுக் கருப்பூர் ஆகிய இடங்களுக்கும் அமுதம் பரவவே, இந்த ஐந்து தலங்களும் பஞ்ச குரோசத் தலங்கள் என்று புகழ்பெற்றன.

எனவே, கைலாயத்திலிருந்து குடந்தைக்கு வர விரும்பிய தேவியே, முதலில் இந்த ஐந்து திருத்தலங்களுக்கும் சென்று, முறைப்படி வழிபட்ட பிறகே கும்பகோணத்துக்குச் சென்றாள் என்பது புராணம். ஆகவே, கும்பகோணத்துக்கு யாத்திரை வரும் பக்தர்களும் முதலில் இந்தப் பஞ்ச குரோசத் தலங்களுக்குச் சென்று தரிசனம் செய்து விட்டுக் கும்பகோணம் சென்றால்தான் யாத்திரையின் பலன் கிட்டும் என்பது ஐதீகம்!

இப்படிப்பட்ட தலங்களுள் ஒன்றான கொரநாட்டுக் கருப்பூர் சுந்தரேசப் பெருமான் ஆலயத்தில் குடிகொண்டிருப்பவள் ஸ்ரீ சுந்தரமாகாளியம்மன். பல்லாண்டுகளுக்கு முன்பு, காவிரி வெள்ளத்தில் மிதந்து வந்த ஒரு பெட்டியில் கண்டெடுக்கப்பட்ட கால்களில்லாத மரச் சிற்பம்தான் அம்மனின் திருவுருவமாக வழிபடப்படுகிறது.

திருவிழாவின் போது அம்மனின் இந்தத் திருவுருவம் ஊர்வலமாகப் பல்லக்கில் எடுத்துச் செல்லப்படும். அப்படி எடுத்துச் செல்லப்படும் போது பல்லக்கு எந்த இடத்திலும் நிற்காமல் ஓடிக் கொண்டே இருக்கும். ''காரணம், இந்த அம்மன் அந்தளவு உக்கிரமானவள். எந்த இடத்திலாவது நிறுத்தினால் அவளது உக்கிரத்தைப் பக்தர்களால் தாங்கிக் கொள்ள முடியாது!'' என்கிறார்கள் கோயில் அர்ச்சகர்கள்!

– சுவீட் ரவி, மு. அய்யூப்கான்



Regular cassettes give you incomplete sound reproduction.



Meltrack Super Cobalt covers the entire spectrum of sound.

# New Meltrack Super Cobalt

## *All the Music. All the Way.*

Turn up the volume using a regular cassette and distortion makes its ugly appearance. The highs are strangled and the lows sound out of breath.

All that is history. New Meltrack Super Cobalt is here.

The new higher oxide packing of the high resolution Super Cobalt cassettes allows you to record at levels upto 3 decibels higher than other conventional tapes. (Which allows you to play your music at much higher outputs without any distortion).




And made with a unique oxide formulation, the Super Cobalt tapes give your music complete clarity - covering the entire range of sound frequencies from sharp highs to booming lows.

Plus, the new Meltrack Super Cobalt cassettes come in Slim International Covers, making them easy to store or carry. And come with a warranty* for immediate replacement, if ever they give you trouble.

New Meltrack Super Cobalt - they leave nothing out. Get the picture?

**Go Meltrackin!**

Every Meltrack Super Cobalt cassette you buy carries an alphabet of 'MELTRACK'. Just collect all the alphabets to form the word 'MELTRACK', send them in, and win great prizes. Further details available with your nearest Meltrack dealer.
Rush ! Offer open for a limited period only.

* Warranty valid for six months from date of purchase. Please note that cassettes are often blamed when the fault lies with dirty heads, capstans and pinch rollers. So please ensure that you keep your music system in good working condition. The Meltrack Audio Head Cleaner could come in handy.

ARTIG / 1275



**MELTRACK**
Audio Cassettes
*The Japanese cassette born in India*

# சக்கரவர்த்தித் திருமகள்

## 52. துக்க சாகரம்

இஷ்டப்பட்ட வடிவம் எடுத்துக் கொள்ளும் சக்தியைப் பெற்றிருந்த மாரீசன் மானாக வந்து ஏமாற்றி, சீதையின் ஆசையைக் கிளப்பி, அதன் காரணமாகத் தன்னை வெகுதூரம் இழுத்துக் கொண்டு போய், அங்கே தன்னுடைய அம்புக்கு இரையாகி உயிர் விடும்போது தன் சுய உருவத்தை வெளிப்படுத்தி, 'ஹா லக்ஷ்மணா நான் செத்தேன்' என்று பொய்க் குரலில் அரக்கன் பலமாகக் கத்தினதையும், - எல்லாவற்றையும் நினைத்து ராமன் கவலை கொண்டான்.

''ஓகோ! இது பெரிய மோசம்; இந்த

> ''ஆசிரமத்தில் சீதையைக் காணாவிடில் லக்ஷ்மணா! நான் இறப்பேன், நிச்சயம். நீதான் திரும்ப அயோத்திக்குப் போய் விஷயத்தைச் சொல்வாய்.....''

மோசத்தால் லக்ஷ்மணன் ஏமாற்றமடைந்து, சீதையைத் தனியாகக் காட்டில் விட்டு விட்டு என்னைத் தேடிக் கொண்டு வந்து விட்டிருந்தால் பெரிய அபாயமாகுமே! சீதையை அபகரித்துக் கொண்டு போகவோ, கொன்று தின்றுவிடவோ அரக்கர்கள் இந்த மோசத்தைச் செய்திருக்கிறார்கள் என்றே தோன்றுகிறது. 'ஹா செத்தேன்' என்று என்னுடைய குரலைக் கேட்டதாக எண்ணி, உடனே சீதை பயந்து லக்ஷ்மணனை என்னிடம் அனுப்பி விடுவாள். நரிகள் அவலட்சணமாக ஊளையிடுகின்றன. பறவைகளும் மிருகங்களும் துரதிருஷ்டக் குறிகளைக் காட்டுகின்றன. உள்ளத்தில் தைரியத்துக்குப் பதில் நடுக்கமாக இருக்கிறது. நான் காண்பதெல்லாம் அபசகுனங்களாகவே இருக்கின்றன. பெரிய ஆபத்தை அடைவேன் என்றே நினைக்கிறேன்.''

இவ்வாறு தனக்குள் கவலைப்பட்டுக் கொண்டு, ராமன் மிக வேகமாக ஆசிரமத்தை நோக்கிச் சென்றான். எதிரே லக்ஷ்மணன் வருவதைக் கண்டான். அவனைக் கண்டதும்,

''ஐயோ! நான் நினைத்தவாறே ஆயிற்று'' என்று கத்தினான்.

''சீதையைக் காட்டில் தனியாக விட்டு விட்டு வந்து விட்டாயே, லக்ஷ்மணா! அவளை ராக்ஷசர்கள் கொன்று தின்று விடுவார்கள் என்பது நிச்சயம். தவறான காரியம் செய்து விட்டாயே! ஜானகி தப்ப மாட்டாள்!'' என்று ராமன் லக்ஷ்மணனுடைய கையைப் பிடித்துக் கொண்டு மிக வருத்தத்துடன் சொன்னான்.

''ஆசிரமத்தில் அவளைக் காணாவிடில் லக்ஷ்மணா! நான் இறப்பேன், நிச்சயம். நீதான் திரும்ப அயோத்திக்குப் போய் விஷயத்தைச் சொல்வாய். ஐயோ, கௌசல்யை துக்கத்தை எப்படிப் பொறுப்பாள்? கைகேயி விரும்பியதைப் பூர்த்தி செய்து விட்டாயே, லக்ஷ்மணா? ராக்ஷசர்களுக்கு நம் பேரில் இருந்து வந்த பகையைப் பேதை சீதையின் மேல் காட்டி இதற்குள் அவளைக் கொன்று தின்று விட்டேயிருப்பார்கள்! அவளைத் தனியாய் எப்படி நீ விட்டு விட்டு வந்தாய்? மாரீசன் போட்ட சத்தத்தைக் கேட்டு ஏமாந்து போனீர்களே! நான் இப்போது என்ன

ராஜாஜி

செய்வேன்? சீதையை நான் காணப் போவதில்லை. அரக்கனுடைய சதி வெற்றியடைந்து விட்டது. நான் சாவது நிச்சயம். உன்னை நம்பி சீதையைப் பார்த்துக் கொள் என்று அவளை உன்னிடம் ஒப்புவித்து வந்தேன், நீ ஏன் அவளை விட்டு விட்டு வந்து விட்டாய்? இப்படிச் செய்யலாமா?'' பசியாலும் தாகத்தாலும் துக்கத்தாலும் கோபத்தாலும் வாட்டப்பட்ட ராமன் பலவாறு கதறினான். கோபம் மேலிட்ட அண்ணனைப் பார்த்து லக்ஷ்மணன் கண்களில் நீர் பெருகப் பேசலானான் :

''அண்ணா! நான் என்ன செய்வேன்? 'ஹா சீதா! ஹா லக்ஷ்மணா!' என்ற கூக்குரலைக் கேட்டதும் சீதைக்குப் பெரும் பயம் பிடித்துக் கொண்டு விட்டது. அவள் துடி துடித்து நடுங்கி, 'போ! போ! ஓடு! ஓடு! ஏன் நிற்கிறாய்?' என்று என்னை விடாமல் தொந்தரவு செய்து நான் என்ன சொல்லியும் கேட்காமல் என்னைத் துரத்தினாள். 'சீதையே! பயப்பட வேண்டாம்.



ராமனை இந்த உலகத்தில் எந்த ராக்ஷ சனும், எந்தப் பகைவனும் எதிர்த்து வெற்றி பெற முடியாது. இது ராமன் குரல் அல்ல. இது மோசம். மூன்று உலகத்திலும் ராமனைக் கொல்லும் ஆற்றல் படைத்தவர்கள் யாரும் இல்லை. யுத்தத்தில் அவன் இம்மாதிரி தீன சுவரத்துடன் ஒரு நாளும் மானத்தை விட்டுக் கதற மாட்டான்; இதை ஒரு கணமும் நம்ப வேண்டாம்' என்று நான் எவ்வளவு சொல்லியும் கேளாமல், 'ஓ பகைவனே! வேஷம் போட்டு எங்கள் கூட வந்து மோசம் செய்தாயே! ராமன் இறந்ததும் என்னை அடையலாம் என்றல்லவா காட்டுக்கு எங்களுடன் நீ வந்தாய்! நீ ஒரு நாளும் என்னை அடைய மாட்டாய், மோசக்காரனே! மகா பாபி! பரதனும் நீயும் செய்த சதியா இது?' இவ்வாறு சொல்லி, பொறுக்கமுடியாத தோஷத்தை என்மேல் சாட்டி, 'நீ போனால் ஆயிற்று. இல்லாவிட்டால் உயிரை இப்போதே விடுவேன்' என்று கதறினாள். உன்மத்தமடைந்தவளாகித் தாங்க முடியாத பேச்சுக்களைப் பேசி என்னைத் துன்புறுத்தித் துரத்தியபடியால் வேறு வழியில்லாமல் வந்தேன், அண்ணா!'' என்றான்.

''நீ சொல்லும் சமாதானத்தை நான் ஒப்புக் கொள்ள முடியாது'' என்றான் ராமன். ''அவள் என்ன சொன்ன போதிலும் அஞ்ஞானத்தால் உண்டான பேச்சு என்று நீ பொறுத்துக் கொண்டிருந்திருக்க வேண்டும் அல்லவா? அவளைத் தனியாக விட்டு நீ எப்படி வரலாம்? பெண்ணாய்ப் பிறந்தவள் பயத்தினால் ஏதேதோ சொல்லுவாள். அதை நீ பொருட்படுத்தியிருக்கக் கூடாது. நீ செய்தது பெருந் தவறு. சீதையை நான் மறுபடி காணப் போவதில்லை'' என்று சொல்லி லக்ஷ்மணன் மேல் கோபித்துக் கொண்டு துக்கத்தில் மூழ்கினான்.

இருவரும் வெகு வேகமாக ஆசிரமத்தை நோக்கிச் சென்றார்கள்.

போகும்போது பல அசுபக் குறிகள் தோன்றின. அவை ஒன்றன் பின் ஒன்றாகத் தோன்றிய போதெல்லாம், ராமன் ''சீதையின் க்ஷேமம் சந்தேகம், சந்தேகம்'' என்று லக்ஷ்மணனுக்குச் சொல்லிக் கொண்டே சென்றான்.

ஆசிரமத்தை அடைந்ததும், சீதையின்றிச் சூன்யமாகக் கிடப்பதைக் கண்டார்கள். ராமனுடைய இதயம் உடைந்து போயிற்று.

மான் தோலும், தர்ப்பையும், புல் பாயும் யாவும் சிதறிக் கிடந்தன. குடிசை பாழாய்க் கிடப்பதைப் பார்த்து ராமன் விம்மி விம்மி அழுதான். இங்கு மங்கும் குடிசைக்குச் சேர்ந்த வனத்தில் ஓடியோடித் தேடிப் பார்த்தான். மரங்களிலெல்லாம் இலைகளும் புஷ்பங்களும் வாடியிருந்தன. சீதையை எங்கும் காணவில்லை.

''ஐயோ! கொன்று தின்று விட்டார்களோ, எங்கே தூக்கிக் கொண்டு போனார்களோ! எவ்வளவு பயந்து போயிருப்பாள்! சகிக்க முடியவில்லையே! ஒரு வேளை ஆற்றுக்குப் போயிருக்கிறாளோ, ஜலம் கொண்டு வரப் போயிருக்கிறாளோ, புஷ்பம் பறிக்கப் போயிருக்கிறாளோ, பார்ப்போம்!'' என்று பைத்தியம் பிடித்தவனைப் போல் கண்கள் சிவந்து இங்கு மங்கும் அலைந்தான். ஒளிந்து கொண்டு வேடிக்கை செய்கிறாளோ என்று மரம் மரமாகத் தேடிப் பார்த்தான்.

(தொடரும்)

## இளைய மகாமகம்

கும்பகோணத்தில் மகாமகம் சாதாரணமாக 12 ஆண்டுகளுக்கு ஒருமுறைதான் வரும். ஆனாலும் சில சமயங்களில் 11-வது ஆண்டிலேயே வருவதுண்டு. இதனை 'இளைய மகாமகம்' என்று அழைப்பார்கள்.

பூமி சூரியனைச் சுற்றி வர 365 நாட்கள் ஆகும். குரு சூரியனைச் சுற்றி வர 4332 நாட்கள் ஆகும். இது சரியாக 12 வருடங்கள் அல்ல. 11.868 வருடங்களே ஆகும். அதனால்தான் மகாமகம் சில சமயங்களில் 11-வது ஆண்டே வருகிறது.

இப்படி இளைய மகாமகம் 1529, 1600, 1683, 1778, 1861, 1956 ஆகிய ஆண்டுகளில் நடந்துள்ளன.

- சிவசுந்தரிகோபு.

**We have a soft corner for pensioners.**



*LTC Presents*

# Pensioners Benefit Scheme

Come and find the difference only LTC provides.

LTC accepts deposits for 12 months too!
(Pensioners include Senior Citizens, Ex-service Men, Widows, etc.)

LTC

**Personalised service**
**Special benefits.**

***P.G. Saranyan***
*Chairman*



LAKSHMI TRADE CREDITS LTD.

*624, Anna Salai*
*MADRAS - 600 006.*
*Ph: 8276646, 8270311*

***Branches***

Madras City : Ambattur Ph: 681860; Anna Nagar Ph: 6212047; Chrompet Ph: 401267; K.K. Nagar Ph: 4833917; Madipakkam Ph: 2346586; Nanganallur Ph: 2348593/2346066; West Mambalam Ph: 4830150 Valasaravakkam Ph: 4828587

Coimbatore Ph: 43576; Karaikudi Ph: 2023; Madurai Ph: 30626; Tirunelveli Ph: 322073-Trichy Ph: 25323

> **"என்னோட கஷ்டம் என்னோடவே இருக்கட்டும்னு எதையும் நான் என் பொண்ணு காதுக்கு எட்ட விடறதில்லை, ராஜம். ஆனால்... இன்னிக்குப் பார்த்து இரண்டு கடன்காரர்களும் அவளுக்கு முன்னாலேயே வந்து நோட்டீஸ் கொடுத்துட்டுப் போயிட்டாங்களே."**

# சிறகடிக்கும் பருவத்தில்

சென்ற மாத வீட்டு வாடகை பாக்கி.

சம்பளத் தேதி அறிந்து காலையி லேயே வந்துவிட்டார், காசிராஜன் - வீட்டுக் காரர்.

சாயந்தரம் ஆபீஸ் விட்டு வரும் வரை யில் பொறுக்க முடியாதாம். ஏதோ உட னடித் தேவை. இரண்டு மாதப் பணத்தை யும் இன்றைக்கே பைசல் பண்ணிவால் தேவலாம் என்பது போல் பேசினார், அவர்.

கண்டிப்பான அவர் தொனியைக் கேட்ட ஜானகிக்கு சாக்குப் போக்குச் சொல் லத் தோன்றவில்லை.

சம்பளம் வாங்கியதும் கொடுத்து அனுப்பலாம் என்று அபர்ணாவை (சனிக் கிழமை கல்லூரி இல்லை) ஆபீசுக்கு வரச் சொல்லி இருந்தாள்.

அதோ... அபர்ணா.

''அம்மா எங்கே?''

மஞ்சள் கரிதாரில் இயல்பான புன்ன கையுடன் உள்ளே நுழைந்தாள்.

ஏற்கெனவே இரண்டொரு தரம் அவள் வந்திருந்தாள். ஆதலால் செக்ஷனில் எல் லோருக்கும் அவளைத் தெரியும் - இன்னார் மகள் என்று.

''வாடி பொண்ணு.''

''கு ட் மா ர் னி ங், ஆன்ட்டி.''

''மார்னிங்... மார் னிங்... உன் அம்மா காஷ் ஆபீசுக்குத்தான் போய் இருக்கிறாள். நீ வரு வேன்னு சொன்னாள். உட்கார்.''

''தாங்க்யூ, ஆன்ட்டி.''

''பி. எ ஸ் ஸி., கெமிஸ்ட்ரிதானே...''

''ம்.''

''எந்த வருஷம்?''

''ஃபைனல்.''

''நல்லாப் படிக்கணும். ராங்க் வா. அப்போதுதான் பி.ஜி.லே பயோ-கெமிஸ்ட்ரி கிடைக்கும். அதுக்கு வைட் ஸ்கோப் இருக்கு. முடிச்ச உடனே வேலை.''

அம்மாவின் சக பெண் ஊழியர்கள் சகஜமாய்ப் பேசினார்கள்.

''ஜானகி எங்கே?'' என்று விசாரித்துக் கொண்டே வந்தவன் வாயில் பாக்கோ... பான் பராக்கோ... என்னவோ ஒரு கண்ணை ராவி.

''வாங்க பரமகுரு சார். ஜானகி காஷி யர் கிட்டே போய் இருக்கா. என்ன விஷ யம்?''

''ரெண்டு மாசமா ஃபண்ட் பணம் தரலை. வாங்கிய கடனுக்கு வட்டி வேறே நிக்குது. எல் லாம் கிளியர் பண்ணச் சொல்லுங்க. நான் அப்பு றமா வந்து பார்க்கிறேன்.''



**தமிழினியன்**

பரமகுரு வெளியேறினான்.

பக்கத்து செக்ஷன். அலுவலக நண்பர்களைச் சேர்த்து ஃபண்ட் நடத்துகிறான். பரஸ்பர உதவி என்ற பெயரில் அசிஸ்டெண்ட் உத்தியோகத்துக்குள் ஒரு லேவாதேவி கடை.

இரண்டு நிமிடப் பொழுதில் இன்னொரு குரல்.

''எனக்கு அப்பவே தெரியும். ஜானகி மேடம் வீட்டில் இருக்க மாட்டார்கள் என்று'' என ஜாதகம் கணித்தவனாய் வந்தான், பியூன் சொக்கலிங்கம்.

''துரை வருவதைச் சொல்லி அனுப்பக் கூடாதோ. தெரிந்தால் ஜானகி இருந்திருப்பாளே!'' கிண்டல் தொனியில் அவன் தலையில் குட்டினாள், அந்தப் பக்கத்து வீட்டுப் பெண்மணி.

''அம்மையார் வந்ததும் நான் கலெக்ஷனுக்கு வந்தேன்னு சொல்லுங்க. தீபாவளிக்கு வாங்கினது. இன்னும் வரல்லை.''

புடைவை வியாபாரம் அவனுக்கு.

அவன் போன ஐந்து நிமிடத்துக்கெல்லாம் ஜானகி வந்து விட்டாள்.

வருகையாளர் நாற்காலியில் மகளைப் பார்த்ததும் அவளுக்கு மகிழ்ச்சி பிறந்தது.

''வந்துட்டியா, அபர்ணா'' என்று புன்னகை செய்தவளாய் சம்பளக் கவரிலிருந்து நானூறு ரூபாய் எடுத்துக் கொடுத்தாள்.

''இந்தா... இரண்டு மாத வாடகை. கொண்டு போய் வீட்டுக்காரரிடம் கொடுத்திடு.''

''வர்றேம்மா. வர்றேன் ஆண்ட்டி.''

அபர்ணா தலைமறையும் வரை காத்திருந்து விட்டு வாய் திறந்தாள், அந்த சிநேகிதி.

''ஜானு... நீ காஷ் ஆபீசுக்குப் போய் இருந்த போது பரமுவும், சொக்காவும் வந்தாங்க.''

''அப்படியா'' அதிர்ந்தாள் ஜானகி. ''என்ன சொன்னார்கள்?''

''பணம்தான்.''

''அபர்ணாவுக்குத் தெரியுமா?''

''ஓ.''



ஜானகியின் முகம் தொங்கிப் போயிற்று.

''என்னோட கஷ்டம் என்னோடவே இருக்கட்டும்னு எதையும் நான் என் பொண்ணு காதுக்கு எட்ட விடறதில்லை, ராஜம். ஆனால்... இன்னிக்குப் பார்த்து இரண்டு கடன்காரர்களும் அவளுக்கு முன்னாலேயே வந்து நோட்டீஸ் கொடுத்துட்டுப் போயிட்டாங்களே.''

''எனக்கும் அந்த எண்ணம்தான், ஜானு. படிக்கிற பெண்கள். எதையும் சென்சிடிவ்வா எடுத்துக்குவாங்க. கல்விக்கு இடைஞ்சலாகுமென்றுதான் நினைத்தேன். ஆனால் வரும்போதே வாயில் பணமென்று வருகிறவர்களிடம் எப்படி இசை இருப்ப முடியும்?'' ராஜமும் சேர்ந்து அங்கலாய்க்க -

ஜானகிக்கு வேலையே ஓடவில்லை, அப்புறம்.

பரிதாபமான தன் நிலையை நினைத்துப் பெரிதாய் மூச்சு விட்டாள்.

லைன் மேனாக இருந்த சாம்பமூர்த்தி, ஒருநாள் கம்பத்தில் ஏறப் போக, விதி அவனைக் கீழே தள்ளியது.

கணவன் கால் முடமானான் என்னும் இரக்க சம்பிரதாயத்தில் ஜானகிக்கு வேலை போட்டுக் கொடுத்தார்கள், மின்வாரியத்தில்.

பிறந்தவை நாலும் பெண்கள்.

படிப்பு.

அடுப்பு.

படுக்கையாகி விட்ட கணவனுக்குப் பராமரிப்பு. நடுநடுவே வரும் நல்லது... கெட்டது.

ஜானகியின் அல்லோலம் ஆபீஸ் முழுக்கவே தெரியும்.

என்றாலும் மகள்களிடமும் குறிப்பாக அபர்ணாவிடம் அதைக் காட்டிக் கொள்ள மாட்டாள், ஜானகி.

மூத்த பெண். கல்லூரிக்குப் போகிறவள். கஷ்டம் தெரியக் கூடாது. அப்போதுதான் படிப்பில் முழுக் கவனம் செலுத்த முடியும் என்று கருதினாள், அவள். ஆகவே எந்த ஒரு பிரச்னையிலும் அடிபடாமல் இருந்தாள், அபர்ணா.

''அம்மா... பாவாடை தாவணி கலர் மங்கிடுச்சு. வேறொரு செட் எடுத்தால் தேவலாம்.''

''வாங்கித் தர்றேன், வா.''

தந்து விடுவாள்.

''என் ஃபிரண்ட் புதுசா செருப்பு வாங்கி இருக்கா. அது மாதிரி எனக்கும் வேண்டும்.''

''பணம் தருகிறேன். நாளைக்கு காலேஜ் விட்டு வர்ற போது வாங்கிடு.''

''தாங்க் யூ மா.''

விகற்பமற்ற வெள்ளையான உற்சாகம். துள்ளி ஓடுவாள், அபர்ணா.

ஜானகி, மகிழ்ச்சியில் குளிப்பாள். கணப்பொழுதில் கஷ்டங்கள் அனைத்தும் கற்பூரமாய்க் கரைய, பெருமையில் நிமிரும் அவள் முகம்.

கல்லூரிப் பருவம் முழுக்க தன் மகள் இப்படியே சிறகடிக்க வேண்டும். சிரமம் தெரியாமல் படிக்க வேண்டும் என்று எண்ணினாள், ஜானகி.

அந்த எண்ணத் தேர், சக்கரம் முறிந்து விட்டதே இன்று.

பஞ்சு போல் மிதந்த மகளின் நெஞ்சம் பாரம் சுமக்க நேர்ந்து விட்டதே.

என்ன பாடுபட்டாளோ...

எப்படியெல்லாம் அமைதியின்றித் தவிப்பாளோ...

மனம் குமைந்தாள், ஜானகி.

அந்தி சாய அலுவல் ஓய்ந்தது.

வீட்டுக்கு வந்தாள்.

முகப்பில் படுத்திருந்த கணவனிடம் அவள் கேட்ட முதல் கேள்வி.

"அபர்ணா எங்கே?"

"அடுத்த அறையில் இருக்கிறாள்."

அங்கே -

பாத்திரக்காரனிடம் போடலாம் என்று தூக்கி எறிந்த பழைய பாவாடை சட்டைகளை எல்லாம் பொறுக்கி வைத்துக் கொண்டு, கை ஊசியால் கிழிசல் தைத்துக் கொண்டிருந்தாள், அபர்ணா.

அந்தக் காட்சி ஜானகியை நோகடித்தது.

"அபர்ணா... என்ன இதெல்லாம்."

"இதுதாம்மா நம் வீட்டின் நிலைமை" என்ற அபர்ணா அமைதியான சிரிப்பில் உதட்டை நனைத்தாள்.

"என்னை மன்னிச்சுடு, அபர்ணா."

"எதுக்காக."

"எதெல்லாம் உனக்குத் தெரியக்கூடாதுன்னு நினைத்தேனோ அதெல்லாம் இன்னிக்குத் தெரியும்படி ஆயிடுச்சு."

"அதுக்காக சந்தோஷப்படறேம்மா."

"சந்தோஷமா."

"ஆமாம். குடும்பத்தைக் கட்டிக் காப்பது நீங்களாய் இருக்கலாம். ஆனால் குடும்பத்தின் லிமிட் என்ன என்பது குழந்தைகளுக்குத் தெரிவது அவசியம்மா."

"மனசு கலக்கமடையுமே என்று..."

"நோ.. படு அபத்தமான ஊகம். வீட்டிலுள்ள இல்லாமை தெரியவந்தால் நீ நினைப்பது போல் பிள்ளைகளுக்கு வருத்தம் வராது. மாறாக, பொறுப்பு உண்டாகும். வறுமையை முறியடிக்க வேண்டும் என்ற உத்வேகம் ஏற்படும். வாழ்க்கையை அவர்கள் சவாலாக ஏற்று முன்னேற்றத்தை நோக்கிப் போய்க் கொண்டே இருப்பார்கள், அம்மா."

"நிஜமாகவா."

"நிச்சயமாக."

அபர்ணாவை அணைத்துக் கொண்டாள், ஜானகி. ஆனந்தக் கண்ணீரால் அபிஷேகம் செய்தாள், அந்த இனிய மகளை.

9

இரவு முழுவதும் தூங்காமல் பல வித சிந்தனைகளில் ஈடுபட்டிருந்த கஸ்தூரிரங்கன் மறுநாள் காலையில், சிவந்த கண்களுடன் படுக்கையை விட்டு அகன்றான்.

சர்க்கரை வியாதிக்காரனின் கண்ணெதிரில், ஒரு கலயம் நிறைய பாசந்தி பரிமாறப்பட்ட மாதிரி தன்னை நினைத்துக் கொண்டான். எப்படியோ இந்த ஹோட்டல் புத்தி வந்து விடுகிறது.

சுதோவைப் பார்த்த முதல் வினாடியே அவன் சலனப்பட்டான். உடனேயே அவள் தன் வாழ்நாள் முழுக்கத் தன்னோடு இணைந்து இருந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும் என்று பேராசைப்பட்டான்.

இருந்தும் அவனுடைய நாகரிகம், அவனது ஆசையை அடக்கி விட்டது.

'சீசீ. இது வெறும் மாயை. உடல் கவர்ச்சி. இதற்கெல்லாம் போய் நீ ஆசைப் படலாமா?' என்று கேட்டது. அவன் அடங்கிப் போனான். இல்லை. அடங்கிப் போன மாதிரி பாவனை செய்தான். உள்ளூர அந்த நெருப்பு இருந்து கொண்டுதான் இருந்தது. நெருப்பு என்று சொல்ல முடியாமல், தணலாகத் தெரியாமல், வெறும் சாம்பல் கட்டியாய்.

இல்லாவிட்டால் எதற்கு அவள் கல்லூரி விழாவிற்குப் போன போது, வேனில் அவளையே நினைத்துக் கொண்டு போனானாம்?

எவ்வளவோ பெண்கள் வருகிறார்களே. சாப்பிடுகிறார்களே. கலகலப்பாய்ச் சிரிக்கிறார்களே. பேசுகிறார்களே. அப்போதெல்லாம் யாரைப் பற்றியும் நினைக்கத் தோன்றாமல், இப்போது மட்டும் ஏன் இப்படி கடல் காகிதம் போல அல்லாட வேண்டும்?

காதல்தான்!

இன்றைக்கு ஒரு முடிவு எடுத்து விடுவது என்று தீர்மானித்தான்.

குளித்தான். என்றைக்குமில்லாமல் இன்றைக்குக் கொஞ்சம் அதிகப்படியான அலங்காரம் செய்து கொண்டான். ஷேவிங்கிற்குப் பின் ஆஃப்டர் ஷேவ் லோஷன். உடம்பில் இருந்து வசீகர மணம் எழுகிற மாதிரி செண்ட். புது குளிர் கண்ணாடி. முழுக்கை சட்டை. எண்ணூற்று ஐம்பது ரூபாய் கொடுத்து வாங்கிய ஷூ.

சபரியை விட்டு வெளியே வந்தான்.

தன் காதலைப் பற்றி அவளிடம் சொல்ல வேண்டும். வெளிப்படையாகப் பேச வேண்டும். இந்தக் காதலுக்கு அவள் பச்சைக் கொடி காட்டினால் வாழ்க்கையில் அவனை விட வேறு யாரும் சந்தோஷமிக்கவர்கள் கிடையாது என்று நினைத்துக் கொண்டான்.

பொதுவாக அவன் சபரியில் இருந்து வெளியேறி எங்காவது போவதாக இருந்தால் டெலிவரி வேன் எடுத்துக் கொண்டு போவான். இல்லாவிட்டால் அவனுக்கிருக்கும் ஹீரோ ஹோண்டாவை எடுத்துப் போவான். இரண்டுமின்றி அவன் மெதுவாக சபரியை விட்டு விலகுவதே தெரியாமல் விலகினான்.

சபரியை விட்டு விலகி வெகுதூரம் வந்து விட்டோம் என்பது உறுதியானவுடன், கஸ்தூரிரங்கன் ஒரு பொது தொலைபேசியைத் தேடினான். தேடியது கிடைத்தது. அருகில் சென்றான். ஒரு நம்பரை டயல் செய்தான். எதிர்முனைக்காகக் காத்திருந்தான்.

எதிர் முனையில் இருந்து 'ஹலோ' கேட்டதும், ''நான்தான்'' என்றான்.

''என்ன?''

''நான் பாக்கணுமே.''

''எப்ப?''

''இப்பவே. ஒரு முக்கியமான விஷயம் பேசணும்.''

''சரி. இங்கேயே இருக்கேன். எங்கயும் போகலை.''

''தாங்க்ஸ்'' என்று ஃபோன் தொடர்பைத் துண்டித்தான்.

வெகு நிதானமாக, பாக்கெட்டில் இருந்து கைக்குட்டையை எடுத்தான். கழுத்து வியர்வை துடைப்பது போல, முகத்தை மெல்லத் திருப்பித் தன்னை யாராவது கவனிக்கிறார்களா என்று பார்த்தான்.

யாரும் தன்னைக் கவனிக்கவில்லை என்று உறுதிப்படுத்திக் கொண்டான். மெல்ல ஒரு பெருமூச்சை வெளியே விட்டான்.

சாலை கறுகறுப்பாய் இருந்தது. மக்கள் வியர்த்துக் கொண்டு பஸ்களில் கசங்கி அலுவலகம் சென்றார்கள்.

# மடிமீது தலை வைத்து...



ஸ்கூட்டர்காரர்களும், மோட்டார் பைக்காரர்களும் தீப்பிடித்த இடம் நோக்கி விரையும், தீயணைப்பு லாரிகள் போல, வேக வேகமாகக் கடந்தார்கள். ஒரு முடவன், பலகையில் பொருத்திய சக்கரங்களின் உதவியுடனும், இடது உள்ளங்கையின் உதவியுடனும் பஸ் ஸ்டாண்டில் நிற்பவர்களிடம் கெஞ்சிக் கெஞ்சி நகர்ந்தான். அவனைப் பார்க்கப் பரிதாபம் மேலிட்டது. வாழ்க்கை நம்பிக்கை மேல் அமிலம்! கஸ்தூரிரங்கன் எதிர்ச்சாரியில், மர நிழலில் ஓர் ஆட்டோ நிற்பதைப் பார்த்தான்.

சாலையைக் கடந்தான். பிச்சைக்காரனை மறந்தான். உலகில் எல்லோருக்கும், எல்லாமும் கிடைக்க வேண்டும் என்று நினைப்பது ஓர் உன்னதக் கனவு என்று தோன்றியது. முதலில் எனக்குக் கிடைக்க வேண்டியது கிடைக்கட்டும்.

ஆட்டோ டிரைவர், ஏதோ ஒரு கதைப் புத்தகத்தில் மூழ்கி இருந்தான்.

''போலாமா?''

ஆட்டோ டிரைவர் திடுக்கிட்டு, கஸ்தூரிரங்கனைப் பார்த்து விட்டு, வண்டியைக் கிளப்பத் தயாரானான்.

''ஏறுங்க.''

ஆட்டோ புகை கக்கி, டர்ர்ரொலியுடன் புறப்பட்டது.

அந்த மர நிழலுக்குச் சற்றுத் தள்ளி, சுநிதா நின்றிருந்தாள். ஆட்டோ கிளம்பியவுடன் அவளும் வண்டியை ஸ்டார்ட் செய்தாள். தலையில் ஒரு ஸ்கார்ஃப் கட்டியிருந்தாள். முகத்தின் பெரும்பான்மையை மறைக்கிற மாதிரி ஒரு கறுப்புக் கண்ணாடி அணிந்திருந்தாள். காதில் தொங்கிய பிளாஸ்டிக் ஸ்டட் பெரிதாய் அவள் கன்னத்தை மறைக்கும் தன்மையுடன் இருந்தது. போதும் போதாதற்கு, மாசான காற்றை ஓரளவு கட்டுப்படுத்தும், வடிகட்டி ஒன்றை அவள் மூக்கில் அணிந்திருந்தாள். எனவே, புது வருடக் கொண்டாட்டங்களுக்கும், கிறிஸ்துமஸ் விழாவிற்கும் வருகை தரும் முகமூடி விருந்தினர்களைப் போல இருந்தாள். ஆட்டோவைத் தன் பார்வை விலிருந்து மறைய விடாமல் பின் தொடர்ந்தாள்.

சுபா

அவன் உதடுகளில் இருந்த ஒரு குழந்தைத் தனமான புன்னகைகூட, அவனறியாமல் தான் அவன் முகத்தில் வந்து அமர்ந்து இருந்தது.

கஸ்தூரிரங்கனின் கவனம் இப்போது சுற்றுப்புறத்தில் இல்லை. தான் சந்திக்கப் போகிறவரிடம் எப்படிப் பேசுவது? என்ன வென்று சொல்வது? காதலிக்கிறேன் என்று சொன்னால் என்ன நடக்கும்? ஒருவேளை மறுப்புத் தெரிவித்து விட்டால், அதை சுகிதா விடம் தெரிவிப்பது எப்படி? சுகிதாவிடம் தெரிவிப்பது ஒரு பக்கம் இருக்கட்டும். முத லில் அந்த முடிவைத் தன்னால் தாங்க முடி யுமா என்றெல்லாம் அவன் நினைத்துக் கொண்டிருந்தான்.

ஆட்டோ, அடையாறு பார்க் ஹோட்டல் எதிரில், புதிதாகக் கட்டப்பட்ட ஒரு டிபார்ட்மென்டல் ஸ்டோர் வாசலில் நின்றது. கஸ்தூரிரங்கன் இறங்கினான்.

**என்ன காரணம்?**

**பணப்புழக்கம் ஏராளமாக இருந்தும் கும்பகோணத்தில் தொழில்வளம் பெருகாததற்கு என்ன காரணம்? காரணத்தை விளக்கும் கட்டுரை அடுத்த வாரம்!**

கட்டடத்தின் பொலிவே பிரமிக்க வைத்தது. ஐந்து மாடிக் கட்டடம். கண்ணாடிச் சுவராய்த் தெரிந்த பெரும் கதவுகளில் ஒன்றைத் தள்ளித் திறந்தான். குளிர் அவனை அணைத்துக் கொண்டது. விதவிதமான பொருட்களை வாங்க விதவிதமான மக்கள்.

கஸ்தூரிரங்கன், 'பரிசுப் பொருட்கள் - கீழே' என்று அம்புக் குறிகாட்டிய போர்டை ஒட்டி நடந்து, படிகளில் இறங்கினான். பாதிப் படிகள் இறங்கியதும், மூடப்பட்டிருந்த ஒரு கதவு தெரிந்தது. இடுப்புயரத்திற்கு மேல் கண்ணாடி பொருத்தப்பட்ட கதவு. கதவின் கண்ணாடிப் பகுதியில், 'மானேஜர்' என்று கருநீல நிறத்தில் ஸ்டிக்கர் ஒட்டப்பட்டிருந்தது. ஏறக்குறைய கரும்பழுப்பாய் இருந்த கண்ணாடி, அறைக்குள் இருந்த யாரையும் வெளிக்காட்ட மறுத்தது.

கஸ்தூரிரங்கன் அதன் கதவைத் தட்டினான். உள்ளே நுழைந்தான்.

''ரங்கா... வா'' என்றார் சுழல் நாற்காலியில் உட்கார்ந்திருந்தவர். நல்ல உயரமாய் இருந்தார். கொஞ்சம் நீளவாக்கில் முகம். காதோரங்களிலும், முகப்பிலும் நரைத்திருந்தார். அது அவருக்கு மேலும் ஒரு கூடுதலான, நாகரிகமான அழகைச் சேர்த்தது. கருநீலக் கலரில் பேண்ட்டும், வெளிர் நீல நிறத்தில் சட்டையும் அணிந்திருந்தார். சட்டைப் பையில் டிபார்ட்மென்டல் ஸ்டோரின் பெயரை அறிவித்த பிளாஸ்டிக் பட்டை.

''உக்காரு.''

உட்கார்ந்தான். அவன் நெஞ்சப் படபடப்புக் கூடிப் போயிருந்தது. லேசாக வியர்த்தான். முதன் முதலாக இதயப் பரிசோதனை இயந்திரத்திடம், இதய வலுவைப் பரிசோதித்துக் கொண்டு, முடிவுக்காகக் காத்திருக்கும், கடமைகள் நிறைந்த குடும்பத் தலைவனைப் போல உணர்ந்தான்.

''சொல்லு. எதுக்கு என்னை அவ்வளவு அவசரமாப் பாக்கணும்னு சொன்னே?''

தயங்கினான். எப்படியும் சொல்லித் தான் ஆக வேண்டும்.

''நானும் உங்களை மாதிரியே இருந்துடலாம்னுதான் இதுநாள் வரைக்கும் நெனச்சிக்கிட்டு இருந்தேன்.''

''என்னை மாதிரின்னா?''

''தனியாளா! கல்யாணம் இல்லாம.''

''ம்''

''இப்ப.. இப்ப...''

''மனசு மாறிடிச்சா?'' கேட்ட அவர் குரலில் லேசான இளக்காரம் இருந்ததோ!

''சுகிதான்னு ஒரு பொண்ணு. ரொம்ப நல்லவ. என்னை லவ் பண்றேன்னு சொல்றா.''

''ஸ்கூல் பையன் போலச் சொல்றியே ரங்கா. நீ அவளை விரும்பலியா?''

''ம்.''

''எனக்கு முன்னாலேயே தெரியும். கேள்விப்பட்டேன். ஒம் மேல கொஞ்சம் பரிதாபமாகக் கூட இருந்தது. எத்தனை நாளுக்குத்தான் இப்படி இருப்பே? சரி. இருக்கட்டும். அந்தப் பொண்ணுக்கு ஒன் விஷயம் எதுவும் தெரியாதே?''

''தெரியாது.''

''தெரியாம பாத்துக்குவியா?''

''என் உயிரு போறதா இருந்தாக் கூட சொல்ல மாட்டேன்.''

''பொண்ணு எப்படி? நல்ல குடும்பத்துப் பொண்தானே? அதெல்லாம் தெரிஞ்சிக்கிட்டியா? ஒருவேளை உன்னைப் பத்தித் தெரிஞ்சிக்கிறதுக்காக...''

''அப்டில்லாம் இல்ல. அவ ரொம்பவும் நல்லவ.''

''ரொம்பத்தான் மாத்தியிருக்கா. இவ்வளவு டான்ஸ் ஆடறே?''

''இல்ல. உங்ககிட்ட பர்மிஷன் வாங்கறதுக்காகத்தான் வந்தேன்.''

''பர்மிஷன் கிராண்டட். போ. வாழ்க்கையை அனுபவி.''

# MONEY



We believe in making your hard-earned money work better for you and your child. Properly managed, it can open up the doorways to numerous opportunities, which is what Annamallai Finance offers you. The chance to use money more wisely. In utmost safety. And we have got **the FA+ rating from CRISIL** to vouch for it.

Write in today for details of our schemes. And open up a whole new world of money management.

***OPENING UP NEW OPPORTUNITIES***

**Special Deposit Mobilisation Months Sep. & Oct. 93**






## ANNAMALLAI FINANCE LTD

Regd. Office: 252, Mettupalayam Road, Coimbatore - 641 043

***Your Prosperity is our Concern***

* This is in continuation with the Statutory Advertisement released in The Hindu on 5.8.93

SASI / 209 / 93















''தாங்க்ஸ். ரொம்ப ரொம்ப தாங்க்ஸ். ரொம்ப, ரொம்ப, ரொம்ப.''

''போதும் ரங்கா. கல்யாணத் தேதியை நீயா முடிவு பண்ணிடாதே. கொஞ்ச நாள் பழகு. அவளைப் பத்திப் புரிஞ்சிக்க. அவ நெஜமாவே ஒன்னை லவ் பண்றாளா.. இல்ல, வேற ஏதாவது நோக்கம் இருக்கான்னு தெரிஞ்சிக்கிட்டு முடிவு பண்ணலாம்.''

''சரி.''

''கங்கிராட்ஸ்!''

கஸ்தூரிரங்கனுக்குக் கண்ணோரத்தில் நீர் துளித்தது.

குழந்தைக்குப் பொம்மை கிடைத்தால் சந்தோஷம். பசித்தவனுக்குச் சோறு கிடைத்தால் சந்தோஷம். ஆடையற்றவனுக்குப் போர்வை கிடைத்தால் சந்தோஷம். மாணவனுக்குத் தேர்வில் வென்றால் சந்தோஷம். கிழவிக்குப் பாக்கு கடிபட்டால் சந்தோஷம். மகிழ்ச்சி என்பது மனிதனுக்கு, மனிதன் மாறுபடும் விஷயம். அது அவர்களின் சூழலைப் பொறுத்தது. பாலைவனத்தில் ஒரு வாய் நீர் கூட சந்தோஷம்தான்.

ரங்காவிற்குப் பாலைவனத்தில் நீர் கிடைத்த சந்தோஷம் தாக்கியது.

வெளியே வந்தான்.

உடனே சுகிதாவைப் பார்க்க வேண்டும் போல் இருந்தது. அவளிடம் உரத்துச் சொல்ல வேண்டும் போல் இருந்தது. 'ஐ லவ் யூ. ஐ லவ் யூ. ஐ டூ லவ் யூ.'

மேகங்களுக்குக் கீழ் ஒரு சிட்டுக் குருவி அதையே சொல்லிப் பறந்த மாதிரி தோன்றியது. சுகிதா மாலைதான் வருவாள். அது வரை அவளைப் பார்க்காதே. பேசாதே. அவளை உன்னுடையவளாய் நினைக்காதே. ஹோட்டல்காரா. ஆக்கப் பொறுத்தவனே. ஆறப் பொறு.

மாலை வரை இஷ்டம் போல் சுற்றினான். அடையாறு பார்க் ஹோட்டலில் நடந்த உணவுக் கண்காட்சிக்குப் போனான். அன்ப்ரேக்கபிள் தட்டுகள் விற்ற கடைக்குப் போய் தட்டுகள் வாங்கினான். வெயில் சுட்டது. மழை நனைத்தது. மகிழ்ச்சியாய்ப் படம் போட்டுக் கொண்டான்.

**மா**லை. அவன் காத்திருந்தான் - அவளுக்காக. அதே இடத்தில். முயல்களுக்கு காரட் கொடுத்துக் கொண்டு கால் மாற்றி நின்றான். தொட்டியில் அழகாய் அலைந்த மீன்களுக்கு உணவு போட்டுக் காத்திருந்தான்.

சுகிதா வரவில்லை.

(தொடரும்)



* கைது செய்யவா...?



* சவுக்கடி!

● எம். அசோக்ராஜா,
அரவக்குறிச்சிப்பட்டி.

*? 'உண்ணாவிரதம் இருந்தது தற்கொலை முயற்சி' என்று ஞானசேகரன் (காங்) எம்.எல்.ஏ. கைது செய்யப்பட்டிருக்கிறாரே, அப்படியானால் முதல்வரும் கைது செய்யப்பட வேண்டியவர்தானே?*

! இப்படியான ஒரு தர்மசங்கடத்தைத் தாம் காவல் துறைக்கு ஏற்படுத்துவதை உணர்ந்திருந்தால் முதல்வர் உண்ணாவிரதமே இருந்திருக்க மாட்டாரே! இதனால்தான் சொல்வது, ஆட்சியிலுள்ளோரே உண்ணாவிரதம், கதவடைப்பு போன்ற போராட்ட முறைகளைக் கையாள்வது தவறு என்று.

# என்.டி.ஆரின் சாதனையைப் பாராட்டலாமா?



* வாலி!



* சாதனையா?

● ஏ. ஜஃபர் காதர், அரியநாயகிபுரம்.

*? "கல்கி" ஒரு ரொமான்டிக் ரைட்டர்" என்கிறாரே தி.க.சி.? அது பற்றி தராசின் கருத்து என்ன?*

! "கல்கி" ஒரு ரொமான்டிக் ரைட்டரும் கூட" என்பது என் கருத்து. அவரது எழுத்துக்கள் அந்த ஒரு வட்டத்துக்குள் மட்டுமே அடங்கி விடுவதல்ல. இலக்கியத்தின் பல் வேறு பிரிவுகளுக்கும் ஏற்ப அவரது எழுத்துக்களிலிருந்து எடுத்துக்காட்டுக்கள் தர இயலும். அவை அனைத்திலும் வெற்றி பெற்றார். அதுதான் "கல்கி"!

● மு. இரவிச்சந்திரன், சேலம்.

*? "எனது கட்சி எம்.எல்.ஏ.க்கள் தவறு செய்தால் முச்சந்தியில் நிறுத்தி சவுக்கால் அடிப்பேன்" என்கிறாரே டாக்டர் ராமதாஸ்...?*

! இவர் கட்சிக்காரர்கள் முதலில் தேர்தலில் நின்று ஜெயித்து எம்.எல்.ஏக்கள் ஆகணும்; பிறகு அவர்கள் தவறு செய்ய வேண்டும்; அப்புறம் அவை தவறுகள்தாம் என்று ராமதாஸ் ஏற்க வேண்டும்; அதன் பின்னர் அல்லவா முச்சந்தி தேட வேண்டும்!

● மங்கதேவன், பம்பாய்.

*? யு.எஸ். ஒப்பன் டென்னிஸ் பந்தயங்கள் எப்படி?*

! ஜிம் கூரியரை பியோலைன் வீழ்த்தியதும் போரிஸ் பெக்கரை லார்ஸன் தோற்கடித்ததும் ஆச்சர்யம்தான். என்றாவது ஒருநாள் இளம்தலைமுறை வெற்றி கண்டுதான் ஆக வேண்டும் என்பது தெரிந்திருந்தாலும் பழைய வெற்றித் தலைமுறை வீழ்ச்சி அடையும் போது திகைப்பு ஏற்படத்தான் செய்கிறது. இறுதிச் சுற்றில் ஸாம்ப்ராஸுக்கே வெற்றி என்றாலும் பியோலைன் என்ற புதுப்பெயர் இறுதி வரை நின்றது டென்னிஸ்ஸின் வெற்றி.

● பானை பசும்பொன், மகாராஜநகர்.

*? "பரபரப்பான இந்தி ஆபாசப் பாடலைத் தடைசெய்ய வேண்டிய அவசியமில்லை" என்று வாலி வாலி பாடியுள்ளாரே?*

! நீதிமன்றத் தீர்ப்பே பாட்டுக்குச் சாதகமாகிவிட்ட பிறகு, வாலியின் வாலி தேவையற்றதாகிறது. ஒருவேளை இங்கே தமிழ்ப்படப் பாடல்களிலும் வசனங்களிலும் நிலவும் ஆபாசத்தை நியாயப்படுத்த அந்த வாலி கைகொடுக்கிறதோ என்னமோ!

● என். சுதாகரன், போளூர்.

*? பொழுது போகாவிட்டால் புத்தகம் படிப்பீரா? இசையை ரசிப்பீரா?*

! நல்ல புத்தகங்கள், நல்ல கலை நிகழ்ச்சிகளைப் படித்தும் பார்த்தும் கேட்டும் ரசிக்க நேரத்தை ஒதுக்கிக் கொள்வேன். நல்ல என்பதை அடிக்கோடிட்டுக் கொள்ளவும். பொழுதுபோகாத நிலை தோன்றியதில்லை. போதாத நிலைதான்.

● ஏ. ஜஃபர் காதர், அரியநாயகிபுரம்.

*? "கட்சியின் தலைமைப் பொறுப்பிலிருந்து கருணாநிதி இறங்கி, இளைஞர்களுக்கு வாய்ப்புக் கொடுத்தால் எதிர்காலத்தில் தி.மு.க. ஆட்சி யைப் பிடிக்கும்" என்கிறாரே நாஞ்சில் மனோகரன்?*

! கருணாநிதி இறங்க வேண்டியதுதான். இளைய தலைமுறைக்கு வழிவிடவும்



✱ அவசர ஆர்வம்!



✱ பஸ் டிரைவர்?!

வேண்டும்தான். ஆனால் அதைப் படிப்படியாகவும் சர்வ ஜாக்கிரதையாகவும் சுமு கமாகவும் செய்யாவிடில் அவர் கட்டிக் காக்கும் கட் சிக்கே ஆபத்தாகிவிடும். மனோகரனின் அவசரம் கட்சி உடைவதைக் காணும் ஆர்வத் தில் பிறந்தது.



✱ டாக்டர் பட்டம்!

● மல்லிகை மன்னன், மதுரை.

*? "கடவுளுக்கு மனிதன் மீது கோபம் வந்தால் அவனை அரசி யல்வாதியாகப் படைத்து விடுகிறார்" என்று சொல்கிறாரே, ரஜினிகாந்த்?*

! பல மணி நேரம் ரஜினியைப் பேட்டி கண்டு, பல பக்கங்கள் எழுதி, கடைசியில் 'புரியவில்லை' என்றுதான் முடிக்கிறார் மதன். அப்படியிருக்க உங்களுக்கும் எனக் கும் ரஜினியின் புரட்சித் தத்துவம் எங்கே புரியப் போகிறது. ஒன்று நிச்சயம் புரிகிறது. கடவுளுக்கு பாரத நாட்டு மக்கள் மீது என் னமோ கோபம்! அதனால்தான் இப்படிப் பட்ட அரசியல்வாதிகளை நம் தலையில் கட்டியிருக்கிறார்!

● இரா. வளையாபதி, தோட்டக்குறிச்சி.

*? மண்டல் கமிஷன் பரிந்துரைகளை அமுலாக்கியிருப்பது குறித்து?*

! எதிர்க்கட்சி கொள்கையைத் தனதாக கவிக ரித்துக் கொண்டு விடுவது என்பது எதிர்க் கட்சிகளை பலவீனப்படுத்த காங்கிரஸ் ஆதி நாளிலிருந்து கையாண்டு வரும் தந்திரம் தான்.

● அ. முஸ்தபா, தக்கோலம்.

*? "என்னைப் பதவியை விட்டு நீக்கினால் பஸ் டிரைவர் வேலைக்குச் செல்வேன்" என்கிறாரே, சேஷன்?*



✱ புரட்சி தத்துவம்!



✱ வேதனை!

! "இன்று பாதை சீராக இல்லை; அதனால் பஸ்ஸை அடுத்த வாரம் ஓட்டுகிறேன்" என்று சொல்லாமலிருந்தால், சரி!

● ஜோ. ஜெயக்குமார், நாட்டரசன்கோட்டை.

*? ஆஷா போன்ஸ்லேக்கு மராட்டிய பல் கலைக் கழகம் டாக்டர் பட்டம் வழங்கி யிருப்பது பற்றி...?*

! அறுபது வயதுக்குப் பிறகும் குரல்வளம் இழக்காமல் பல மொழிகளில் பாடி, ஒருமைப்பாட்டுக்கு உதவிய தற்காகக் கௌரவ டாக்டர் பட்டம்

✱ இலக்கியப் பேச்சு



## நீங்கள் கேட்டவை - தராசு

வழங்கப்படுவதில் வியப்பு என்ன?

● அ. அப்துல்காதர், சிங்கபெருமாள் கோயில்.

*? அரசியல்வாதி குமரி அனந்தனின் இலக் கியப் பேச்சைக் கேட்டதுண்டா?*

! உண்டு. அதிலும் சமீபத்திய பாரதியார் சங்க பாரதி விழாவில் இலேசாக அரசியலைக் கோடி காட்டிக் கிண்டலடித்து, ரசிகர் சிரிப் பிலே அரங்கத்தை அதிரச் செய்தும் "ஊழிக் கூத்து" பாடலை உணர்ச்சிப் பரவசமாக விளக்கி, ரசிகர்களை மெய்சிலிர்க்க வைத் தும் அசத்தி விட்டார் போங்க!

● ஆர். ராஜேஷ்குமார், சென்னை.

*? 73 வயதில் மறுமணம் செய்து கொண்ட என்.டி. ராமராவின் சாதனையைப் பாராட் டலாமா?*

! சட்டபூர்வமாகத் தவறில்லை என்று என். டி..ஆர். எடுத்துக்காட்டிய பிறகு, பகிரங்க மாக நடக்கும் மறுமணத்தை 'சாதனை' என்று கிண்டலடிக்க நமக்கு உரிமை யில்லை. இது அவ்விருவர் சம்பந்தப்பட்ட தனிப்பட்ட விவகாரம். "பிரபு - குஷ்பு ரக சியத் திருமணம்" என்று முதல் நாள் செய்தி யும், "இல்லவே இல்லை" என்று மறுநாள் வெளிவரும் மறுப்பும்தான் வேதனை. இதற்கு என்.டி..ஆர். விவகாரம் எவ்வளவோ தேவலாம்.

❑ ரூ 25 பரிசு பெறுபவர் :
எம். அசோக்ராஜா,
ஸ்ரீ கணபதி ஏஜென்ஸிஸ்,
பெல் நகர், திருச்சி - 620 015.

# கும்பகோணத்துச் சில நினைவுகள்...

ரா.கி.ரங்கராஜன்

கும்பகோணத்துக்காரன் என்று பெயர்தானே ஒழிய, தொடர்பு விட்டுப் போய்க் கிட்டத்தட்ட நாலு மாமாங்கமாகிறது. என் குழந்தைக் காலத்துக் கும்பகோணம் இன்றும் அப்படியே இருக்கிறதா, தெரியவில்லை.

உதாரணமாக –




1. காந்தி பார்க்கில் க்ரூப் க்ரூப்பாக ஏழெட்டுப் பேர் உட்கார்ந்து பேப்பர் படித்து அரசியலை விமர்சனம் செய்து கொண்டிருப்பார்களே, இப்போதும் அவர்களோ அவர்களது சந்ததியினரோ அதே காரியத்தை அதே ஆர்வத் துடன் செய்து வருகிறார்களா?

2. கும்பகோணம் அரசினர் ஆண்கள் கல்லூரியில் சில வெண்கலக் குரல் விரிவுரையாளர்கள் நடத்தும் பாடங்கள் காவேரிக்கு இக் கரையில் கேட்குமே, இப்போதும் கேட்கிறதா?

3. கும்பகோணம் அரசினர் ஆண்கள் கல்லூரியில் படகுக் கிளப் இப்போதும் இயங்கி வருகிறதா? ஆடிப் பெருக்கு தினத்தன்று கல்லூரி மாணவர்கள் திருவையாறு வரையில் படகு விட்டுக் கொண்டு போய், கரையில் உள்ளவர்களின் கைதட்டலைப் பெற்றுக் கொண்டு திரும்பவும் படகு செலுத்திய வண்ணம் கும்பகோணம் கல்லூரிக்குத் திரும்புவார்களே, அது இப்போதும் நடக்கிறதா?

4. காவிரியில் நிறையத் தண்ணீர் வரும்போது வாழை யிலைக் கட்டுகளைத் தெப்ப மாகக் கட்டி, அதன் மீது கறிகாய்கள் ஏற்றி, தெப்பத்தின் நுனியில் தொற்றி னாற் போலவே மிதந்து, கும்ப கோணம் பெரிய மார்க்கெட்டை அடை வார்களே, அந்த வீர விற்பனையாளர்கள் இப்போதும் இருக் கிறார்களா?

5. கீழக் கடலங்குடி தெருவுக்கும் மேலக் கடலங்குடி தெருவுக்கும் நடுவே, தெரு மத்தியில் ஒரு பழைய கிணறு கைப் பிடிச் சுவர் இல்லாமல், ராட்டினம் இழந்து நிற்குமே, அது அப்படியே இருக்கிறதா?

6. ஐயங்கார் தெரு தாத்தாச்சாரி யார்களும் பாட்ராச்சாரியார் தெரு பாட்ராச் சாரியார்களும் சண்டை போட்டுக் கொண்டு பெரிய பெருமாள் உற்சவத்தின் போது தனித் தனியே 'கோஷ்டிகள்' நடத்துவார் களே, இப்போதும் அப்படித்தானா? அல்லது சமரசம் ஆகிவிட்டதா?

7. ரெட்டியார் குளம் கீழ்க் கரையில் கண்ணாவையர் வீட்டுக் காம்பவுண்டு சுவரில் சிறு ஜன்னல் வைத்து, கோடை காலத்தில் வழிப்போக்கர்களுக்கு நீர்மோர் வழங்குவார்களே, அந்தத் திருப்பணி இப் போதும் நடைபெறுகிறதா?

8. கும்பேசுவர சுவாமி கோவிலில் நவராத்திரி உற்சவத்தின் போது, சன்னிதிக் குச் செல்லும் வழியில் கடைகளும், அங்கே ஒருவன் டுர் டுர் டுர் என்று ஒரு பயங்கர சத்தம் எழுப்பியபடி படுதாவுக்குப் பின்னே பூதக் கண்ணாடி வழியாகப் பிரம்





மாண்டமான கப்பல் படங்களைக் காட்டு வானே, அந்த 'ஷோ'வும் அப்படியே இருக் கிறதா?

9. சாது சேஷய்யா லைப்ரரியில், கல்கியின் கதை கட்டுரைகளும் மாலியின் படங்களும் நிறைந்த பழைய ஆனந்த விகடன் வால்யூம்களை இன்றைக்கும் பத் திரமாக வைத்திருக்கிறார்களா?

10. டைமண்ட் டாக்கீஸில் எங்கள் வெளியே வருவதற்கான உயரமான தகரக் கதவு முன்போலவே சிறிது இடுக்குடன் இருக்கிறதா? அந்த இடுக்கில் கண் வைத் துப் பார்த்தால் முன்போலவே கோண லாகக் கொஞ்சம் படம் தெரிகிறதா? காது வைத்துக் கேட்டால் பிசிறு பிசிறாகக் கொஞ்சம் பாட்டுக் கேட்கிறதா?

11. ரயில்வே ஸ்டேஷனுக்குச் செல்லும் பெரிய சாலையில் உயரமான வெளை மதில் சுவர்களுடன், மகா அமைதியாக, மகா நிசப்தமாக ஒரு பெண்கள் கான் வெண்ட் பள்ளி காட்சி தருமே, இப்போதும் அதே நிசப்தம் நிலவுகிறதா? அல்லது எல் லாப் பள்ளிக்கூடங்களையும் போல் இது வும் சந்தடி நிறைந்து விட்டதா?

12. கடைத் தெருவில் பொற்றாமரைக் குளத்துக்குப் போகும் வழியில், வெற்றி லைகளின் காம்பைப் பிடித்துக் கிடுகிடு வென்று எண்ணி, குல்லாவைக் கழற்றி, அதற்குள்ளிருந்து நார் எடுத்து வெற்றிலை 'கவுளி'யைக் கட்டித் தருவார்களே, அந்த சாயபுகள் இப்போதும் அங்கே இருக்கிறார் களா?

13. பூக்கடைகளுக்கு நடுவே இருக்கும் அனுமாருக்கு இப்போதும் வெண்ணெய் சாத்தி வழிபடுகிறார்களா?

14. டவுன் ஹைஸ்கூல் வாசலிலும் எதிர்ச் சாரியிலும் கோணி பரப்பி, அதில் வெள்ளரிப் பிஞ்சுகளைக் கூறு கட்டி வைத்து இப்போதும் விற்கிறார்களா?

15. கணபதி அன் கோ.வில் ஓவியர் கோபுலுவைக் கவர்ந்த கமகம வறுத்த சீவல் 'வடையம்' (பீடா) கடை அப்படியே இருக் கிறதா? அதன் இன்னொரு பகுதியில் கி.ரா. கோபாலனைக் கவர்ந்த பன்னீர்ப் புகை யிலை இப்போதும் விற்கப்படுகிறதா?

16. கிழ டபீர் தெருவையும் மேல டபீர் தெருவையும் பிரிக்கும் அந்தச் சின்ன வாய்க்கால் (?), அந்தச் சின்னப் பாலம் இரண்டும் அப்படியே இருக்கிறதா?

17. காவேரியின் அக்கரையில் உள்ள மயானத்தில் பிணம் எரிந்து புகை வந்தால் தான் இக்கரையில் உள்ள சக்கரத்தாழ்வார் கோவிலில் பெருமாளுக்குத் தளிகை சமர்ப் பிப்பார்கள் என்று அன்றைக்கிருந்த வதந்தி இன்றைக்கும் இருக்கிறதா?

18. ரயில்வே ஸ்டேஷன் வெளிப்புறம், உப்பிலியப்பன் கோவிலுக்குப் போகும் சாலை முனையில், ஜட்கா வண்டிக்காரர் கள் 'வலங்கிமான்' வலங்கிமான்!' என்று இப்போதும் கூவுகிறார்களா?

19. மங்களாம்பிகை சன்னதியில் வெள்ளிக்கிழமைகளில் மாமிகளின் பட்டுப் புடைவை சர சரப்பும், பெரிய தெரு நகைக் கடைகளின் வைர ஜொலிப்பும், திருமஞ்சன வீதி இறந்த சாக்கடையில் பன்றிகளின் உறு மலும், நாகேசுவர சுவாமி கோவில் வட்டா ரத்தில் தறிகளின் ஓசையும், சாரங்கபாணி



சுவாமி கோவில் பெருமாள் சன்னதி தாயார் சன்னதிகளின் இருட்டும், எல்.ஜி. கோதுகோ பெருங்காயக் கடையின் மண மும், தண்ணீர் ஓடாத நாட்களில் புதுப் பாலத்தின் அடியில் குவியும் குப்பைகளும், வெளியே எடுத்தால் வம்பு என்ற நிலையில், நிலையிலேயே நிலைத்திருக் கும் சித்திரைத் தேரின் கம்பீரமும், சோலையப்ப முதலித் தெரு பஜனை மடங் களின் சங்கீதமும் மகாமகத்தின் போது மட்டும் சந்து பொந்துகளில் கூட ஜேஜே என்ற ஜன நடமாட்டமும் - இன்னோரன்ன ஆயிரத்துக்கணக்கான யதார்த்தங்களும், ஓ, கும்பகோணத்துக்காரர்களே, அப்படியே இருக்கிறதா, சொல்லுங்கள்.

கார்ட்டூன்கள் : கோபுலு

# 'உழைக்க வேண்டிய நேரத்தை விரயம் செய்யாதீர்கள்!'

◆ பிலாடி நபி, விநாயகர் சதுர்த்திக் கொண்டாட்டங்கள், ஊர்வலங்கள் மத நல்லிணக்கத்துக்கே தவிர, அடுத்தவர்கள் மனத்தைப் புண்படுத்த அல்ல. ஆனால் இன்றைய நிலையில் மேற்கண்ட விசேஷங்களைச் சிலர் தவறாகப் பயன்படுத்தி வருகிறார்கள் என்பதை உங்கள் அட்டைப்படக் கட்டுரை நன்கு உணர்த்தியது. இந்தச் சமயங்களில் மக்களுக்கு ஏற்படும் ஆபத்துக்களைத் தவிர்க்க, நீங்கள் கூறிய யோசனைகள் பாராட்டுக்குரியவை மட்டுமல்ல; பின்பற்றக் கூடியவை.

மொரட்டுப்பாளையம், இராஜேஸ்வரன்.

◆ இராம கோபாலனின் பேட்டியை மட்டும் போடுவதும், அட்டையில் விநாயகர் படத்தைப் போடுவதும் கலவரம் செய்வது இந்துக்கள் மட்டும்தான் என்பது போல ஒரு தோற்றத்தை உண்டு பண்ணும். இருந்தாலும் விநாயகர் சதுர்த்தி பற்றிய இராம கோபலனின் பேட்டி நியாய உணர்வுடன் தொனித்தது என்பதை மறுக்க முடியாது. அவருடைய பதில்களைப் பிரசுரித்த கல்கிக்குப் பாராட்டுக்கள்.

மருங்கூர், பாலு. கிருஷ்ணமூர்த்தி.

◆ இன்றைய நிலையில் மத ஊர்வலங்கள் நடத்தாமலேயே நாடு முன்னேற முடியும்; முன்னேறும். அதற்கு மக்களின் உழைப்புத்தான் தேவையேயன்றி மேடை முழக்கங்கள் அல்ல. அதனால் உழைக்க வேண்டிய நேரத்தை விரயம் செய்யாதீர்கள்!

கோவை - 25, சுவாமி சுந்தரானந்தா.

◆ தாங்கள் தலையங்கத்தில் கூறியதுபோல், அரசியலில் செலுத்தும் ஆர்வத்தைப் பொருளாதாரத்தில் பாதியளவாவது மக்கள் செலுத்தினால் நாம் உன்னத நிலை அடைவோம் என்பது உறுதி.

மதுரை - 16, ஆர். கார்த்திகேயன்.

◆ அரசுடைமை வங்கிகளின் நஷ்டம் 3466 கோடி என்பதைப் படித்தவுடன் அதிர்ச்சியாய் இருந்தது. வங்கிகளின் நஷ்டத்துக்கான காரணத்தைத் தலையங்கத்தின் மூலம் விளக்கமாக அறிய வைத்தமைக்கு நன்றி.

கோவை - 9, இ.இ. நேரு.

◆ தமது 'சேவா' அமைப்பின் தன்னலமற்ற சேவையின் மூலம் இன்று பெண்களிடையே ஓர் உற்சாகத்தையும், உத்வேகத்தையும், நம்பிக்கையையும் தோற்றுவித்திருக்கும் இலா 'மக்ஸைஸே பரிசு' மட்டுமின்றிப் பல்வேறு வகையான உயர்ந்த பரிசுகளையும் பெற முழுத் தகுதியானவர்தாம்.

மணக்காடு, ஸ்ரீலலிதாமேரி.

◆ பிரகாசம் கரு நிதி பெற்றதால் காந்தி, படேல், நேரு வரை பிரச்னை சென்று, பிறகு காந்தியின் கண்டிப்பால் 'நிதியை' காங்கிரஸ் கட்சியிடம் பிரகாசம் ஒப்படைத்த வரலாறு தற்போது அவசியம் தெரிய வேண்டிய ஒன்று.

மதுரை - 9, இரா. கல்யாண சுந்தரம்.

◆ மதுமிதாவின் ''மண் புதிது'' மனதைத் தெளிய வைத்த சிறந்த படைப்பு!

கீழ்வேளூர், கோ. தியாகராஜன்.

◆ சமீபத்தில் அ.தி.மு.க.வில் தன்னை இணைத்துக்கொண்ட பி.எச். பாண்டியன் அதற்காகச் சொல்லும் காரணங்கள் சிறுபிள்ளைத் தனமானவை. உங்கள் தலைப்பை 'பாண்டியன் பாலிடி(கி)ஸ்' என்று தந்திருந்தால் கச்சிதமாகப் பொருந்தியிருக்கும்.

சென்னை 1, இளம்பிறைபாருக்.

◆ சீன யுத்தத்தின் போது அறிஞர் அண்ணா பிரிவினை வாதத்தைக் கைவிட்டார் என்று நெய்வேலி துரைகையன் எழுதி இருக்கிறார். அப்போது அண்ணா ''பிரிவினை வாதத்தை'' நிறுத்தி வைத்திருப்பதாகத்தான் கூறினார். 1965 - ல் மத்திய உள்துறை அமைச்சராக இருந்த குல்சாரிலால் நந்தா ''பிரிவினை வாதத் தடைச் சட்டம் கொண்டு வரப்படும்'' என்று அறிவித்தார். அப்போது ராஜ்ய சபா உறுப்பினராக இருந்த அண்ணா ''அப்படி ஒரு சட்டம் கொண்டு வரப்படுமானால் தி.மு.கழகம் அதை எதிர்க்காது. அதற்கேற்றவாறு கழகத்தின் கொள்கையும் சட்டதிட்டங்களும் மாற்றி அமைக்கப்படும்'' என்று அறிவித்து ''திராவிடநாடு'' கோரிக்கையை இறுதியாகக் கைவிட்டார்.

மதுரை - 1, ப. சுப்பிரமணியன்.

◆ ஆயிரமாயிரம் குழந்தைகளின் அப்பாவாக விளங்கும் பா. கல்யாண சுந்தரம், இன்னொரு மனிதன் மாணிக்கம் என்றால் மிகையில்லை!

திருச்சி - 17, தென்னூர் யாதவன்.

◆ ''பம்பாய் - காதலிக்கப்படும் நகரம்'' (5.9.93) என்ற எனது கட்டுரையில் ''கேட் வே ஆப் இந்தியா''விலிருந்து படகில் போகுமிடம் 'எல்லோரா' தீவு என்றிருக்கிறது. அது 'எலிபெண்டா' என்றிருக்க வேண்டும்.

பெங்களூர் - 79, வி. ராமணன்.

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் : வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்:
வி. வைத்தியநாதன். ஆசிரியர் : சீதா ரவி. நிர்வாக ஆசிரியர் : கி. ராஜேந்திரன்.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி - ஆசிரியர் குழு
அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 234 விளம்பரம் - சந்தா : 2345622; டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - தபால் : ரூ. 200/-; விமானத் தபால் ரூ. 525/-.




# No more WAIST!



Introducing

**SunLine**

Super - refined Sunflower Oil

புதிய சன்லைன் - சூரியகாந்தியின் அனைத்து
சிறப்புகளும் நிரம்பப்பெற்ற சமையல் எண்ணெய்.
ஊட்டச்சத்துக்கள் நிறைந்த, இதயத்திற்கு இதமான
சன்லைன்-உங்கள் எடை கூடாமலும் ஆரோக்கியத்தில்
சிறந்து விளங்கவும் முதன்மை பெற்றது.
சன்லைன், மெழுகுதன்மை, நீக்கப்பட்டதால் லேசாகவும்
தெளிவாகவும், மேலும் உடலில் சேரும் கொலஸ்ட்ராலை எதிர்க்கும்
தனித்தன்மை பெற்றது சன்லைன் சூரியகாந்தி எண்ணெய்.

DE-WAXED

ANTI-CHOLESTEROL

The taste that wins *hearts!*








A quality product from S.S.D. Oil Mills Co. Ltd., Madras - 600 056

ARTIG/1283

REGISTERED NO. M. 4392
Registered as Newspaper in Srilanka

# ''சொட்டு நீலத்துடன்'' வழங்கப்படும் இலவசப் பரிசுகள் என்றுமே என்னைக் கவர்ந்தது இல்லை.



பொதுவாக ஒரு பொருளை நுகர்வோர் நிராகரிக்கும்போது, அதன் தயாரிப்பாளர் தனது விற்பனைக்கு கைகொடுக்க, பயன்படுபவையே இந்த இலவசப் பரிசுகள் :

ஆனால் 'உஜாலா'வின் சிறப்பே தனி

நமக்கு தேக்கரண்டி அளவுகள் தேவை யில்லை ?

உஜாலாவின் நான்கு ''துளிகளே'' போதும் ஒரு லிட்டர் நீருக்கு.

**உபயோகிப்பவர்களுக்கு.**

உஜாலாவின் ஒவ்வொரு துளியும் துணிகளில் நிரந்தரமான வெண்மையை உண்டாக்கி மனதில் நிறைந்த திருப்தியை தருகிறது. நீரில் எளிதாக கரைந்து துணிகளின் இழைகளில் உடனடியாக உறிஞ்சப்பட்டு இண்டைன்ட் ஆக்ஷன் மூலம் ஒரே சீராக பரவும் தன்மையை உடையது உடைகளின் அழுக்கை நீக்கி துணிகளுக்கு பளபளப்பான வெண்மையை தருகின்றது.
ORAL TOXICITY TEST சோதனை மற்றும் SKIN IRITATION TEST
சோதனையில் சருமத்திற்கு எந்த கெடுதலையும் உண்டாக்காது என்று சான்றிதழ் பெற்றது உஜாலா. இது ஜோதி லேபரட்டரியின் ஒரு சிறந்த தயாரிப்பு ஆகும்.






**JYOTHY LABORATORIES**

Marketing Office:
44, Shivshakthi Ind. Estate, Marol,
Bombay-400 059.
Regd. Office: Sreekrishna Nagar
Bombay-400 066.

# உஜாலா